# கண்ணன் கருணை

(பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் லீலாவினோதங்கள்)

கே. ஜி. கோபால்

வெளியீடு:

திருமிகு ஈகா C. வெங்கடாசலம், B.Com., D.BM.,
தலைவர்,
தமிழ்நாடு ஆரிய வைசிய மகாசபா,
சென்னை.

---

"THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATHI DEVESTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

முதற்பதிப்பு: ஜூலை 1990.   1000 Copies



விலை: ரூ. 15-00

புத்தகம் கிடைக்குமிடங்கள்:

V. K. நாகரத்னம் செட்டி
மளிகை & ஏஜன்சீஸ்,
செவ்வாய்ப்பேட்டை, சேலம்-1.

K. R. மாணிக்கம்செட்டி,
பாரஸ்ட் காண்ட்ராக்டர்ஸ்,
நிலக்கிழார்,
தலைவர். ஆர்ய வைசிய மகாசபா,
கெம்பநாய்க்கன்பாளையம் அஞ்சல்,
சத்யமங்கலம் வழி, பெரியார் மாவட்டம்.

K. G. பாலமுரளி கிருஷ்ணா,
மல்லப்பாடி அஞ்சல்,
பருகூர் வழி, கிருட்டிணகிரி வட்டம்,
தருமபுரி மாவட்டம்.

---

அச்சிட்டோர்:
திருமகள் அச்சகம், பைபாஸ் ரோடு, தருமபுரி-1. போன்: 6247

# சமர்ப்பணம்



தென்காசியில் கோயில் கொண்டுள்ள காசி விசுவநாதர் ஆலயத்தில் 178 அடி உயரமுள்ள 9 நிலை இராச கோபுரத்தை ஆறே ஆண்டுகளில் கட்டி முடித்து திருப்பணி செய்த ''பொன்மனச் செம்மல், திருப்பணி வேந்தர், இருபதாம் நூற்றாண்டின் இராச ராச சோழன், எங்கள் வள்ளல், தினத்தந்தி, இராணி (வார இதழ்) பத்திரிக்கை அதிபர் மேண்மைமிகு

**பா. சிவந்தி ஆதித்தன்**

ஐயா அவர்களின் மலர்ப் பாதங்களுக்கு இந்த நூலை காணிக்கையாகப் படைக்கின்றேன்.

இங்ஙனம்,
**கே. ஜி. கோபால்**

# நன்றியுரை

இந்தத் தெய்வீக காவியம் வெளிவர நிதியுதவி செய்த அருள்மிகு. திருமலா திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் இதயங்கனிந்த நன்றியை இருகரம் கூப்பி வணங்கித் தெரிவிக்கின்றேன்.



என்றும் வேங்கடவன் அடிமை
**கே. ஜி. கோபால்**

தமிழ்நாடு ஆரிய வைசிய மகாசபா தலைவர்

## திரு ஈகா. C. வெங்கடாசலம் அவர்களின்

# வாழ்த்துரை

நம் வைசிய குலத்தில் உதித்த மல்லப்பாடி திரு K. G. கோபால் அவர்கள் எழுதியுள்ள இந்த இறைமை நூல் கண்ணன் கருணை. இது வைகுண்டவாசன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கருணையை எளிய நடையில் இவ்வளவு அழகாக எழுதியிருப்பதைப் பாராட்டுகிறேன்.

பல இறைமை நூல்களையும், நவீனங்களையும் எழுதியுள்ள இந்த இளம் எழுத்தாளர் மேன்மேலும் பல நல்ல புத்தகங்களை எழுதி அனைத்து நலமும் வளங்களும் பெற்று வாழ எல்லாம் வல்ல அன்னை ஸ்ரீ கன்னிகா பரமேஸ்-வரியைப் பிரார்த்திக்கிறேன்.

வாழ்க இவர் சேவை!
வாழ்க தர்மம் சத்தியம்!

அன்பன்,

**C. வெங்கடாசலம்**

தலைவர், ஆரிய வைசிய மகா சபா, சென்னை.

சேலம் பிரபல டாக்டர்

திரு லவகுமார் அவர்களின்

# வாழ்த்து

என் அருமை நண்பர் மல்லப்பாடி திரு K.G. கோபால் அவர்கள் எழுதிய இந்த இறைமை நூல் கண்ணன் கருணை -பகவான் ஸ்ரீ கிருஷ்ணரின் லீலைகளை தெள்ளத் தெளிவாக விளக்குகிறது.

இந்த இளம் எழுத்தாளரின் வருங்காலம் பொற்காலமாகத் திகழும் என்பதில் ஐயமில்லை. நல்ல படைப்புகளை எழுதிப் புகழ் பெற இப்போதே என் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறேன்.

அன்புடன்,

Dr. லவகுமார்

பிரபல வணிகர் திலகம் திருப்பத்தூர்
**நந்தகோபால் செட்டியார் அவர்களின்**

# வாழ்த்துரை

என் அருமை நண்பர் மல்லப்பாடி K G. மல்லப்பாடி சிறந்த எழுத்தாளர். பல நூல்களை எழுதியவர். அன்னை வாசவியின் புராண வரலாற்றை தமிழில் எழுதியவர்.

இவர் இந்த 'கண்ணன் கருணை' என்ற இறைமை நூல் எழுதி பரந்தாமனின் புகழை விவரிக்கிறார். கீதையையும், கண்ணனின் திருவிளையாடல்களையும் இவ்வளவு அழகாக எழுதியதை நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

இவர் சேவை மேன்மேலும் வளர பகவான் ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரார்த்திக்கிறேன்.

அன்புள்ள,
**நந்தகோபால்செட்டி**

வெல்ல மண்டி,
சின்னக் கடைத் தெரு,
திருப்பத்தூர்-N.A. Dt.

வைசிய குல ரத்னம், சேலம் செவ்வாய்ப்பேட்டை
ஆரிய வைசிய இளைஞரணித் தலைவர்

**திரு பாலகுமார் B.A.,.B.L., அவர்களின்**

# வாழ்த்துரை

நம் வைசியர் ஒருவர் நம் குல தெய்வத்தின் கதையை எழுதியுள்ளாரே அவர் யார் என நான் தேடும் நேரத்தில் -நண்பர் K. G. கோபால் மறுபடியும் பக்திக்கு விருந்தாக 'கண்ணன் கருணை' எழுதியுள்ளார்.

இந்த இளம் எழுத்தாளரின் நூல்கள் பாராட்டத் தக்கது. ஒவ்வொருவரும் படிக்கத்தக்கவை.

தர்மபுரி மாவட்டம் - தர்மத்திற்குப் பெயர்பெற்றது. அத்துடன் பக்திக்கும் பெயர்பெற்றது. ஆம்! நமது K. G. கோபால் பக்தி நூல்களை எழுதி திருமலைவாசனின் பரிசுகளைப் பெற்றுள்ளாரே!

நண்பர் கோபால் பல்கலைச் செல்வங்களும் பெற்று நீடூழி வாழ இறைவன் கண்ணனை வேண்டுகிறேன்.

அன்புடன்,
**பாலகுமார்**

செவ்வாய்ப்பேட்டை,
சேலம்.

வைசிய குலச் செம்மல்

திரு K. R. மாணிக்கம்செட்டியார் அவர்களின்

# வாழ்த்துரை

நம் குல தெய்வம் கன்னிகா புராணம் எழுதிப் புகழ் பெற்ற நம் அருமை நண்பர் K. G. கோபால், மல்லப்பாடி அவர்கள் இதோ மறுபடியும் ஒரு இறைமை நூலை எழுதி உள்ளார்.

பரந்தாமன் கண்ணனின் லீலைகளை விவரிக்கும் தர்ம காவியம். சபாஷ்! இவர் இப்படியே இறைமை நூல்களை எழுதி எழுதி பக்தி மார்க்கத்தை வளர்க்கட்டும்!

வாழ்க ஆத்திகம்! வாழ்க தர்மம்! வாழ்க சத்தியம்! வாழ்க வளர்க நம் இளைய எழுத்தாளர் கே. ஜி. கோபால்!

அன்புடன்,

K. R. மாணிக்கம்

ஆரிய வைசியத் தலைவர்,
கெம்பநாய்க்கன்பாளையம்,
சத்தியமங்கலம் வட்டம்,
பெரியார் மாவட்டம்.

சேலம் பெருவணிகர்,
ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி ஆலயத் தலைவர்
**திரு கோபாலகிருஷ்ணசெட்டியார் (கோபி செட்டியார்)**
**அவர்களின்**

# வாழ்த்துரை

தம்பி கோபால் இளைஞர்! ஆனால், காவியங்கள் எழுதுவதில் சிறந்தவர். இவரது ஆத்ம கீதம், ஸ்ரீ வாசவி ஜனனம் போன்ற நூல்கள் வரலாற்றுப் புகழ் படைத்தவை!

நூல்நிலையத்திற்கும் சென்றுள்ளது. நம் அன்புத் தம்பி கே.ஜி. கோபால் இதோ மறுபடியும் ஒரு புகழ்பெற்ற புராண காவியம் 'கண்ணன் கருணை' எழுதி அதற்குத் திருமலைத் தெய்வத்தின் நிதி உதவியும், பரிசும் பெற்றுள்ளார்.

இவர் நீடூழி வாழ்ந்து இப்படியே நூல்கள் மூலம் மக்கட்கு சேவைகள் செய்து அஷ்ட ஐஸ்வரியமும் பெற்று வாழ அன்னை வாசவியை வேண்டுகிறேன்.

அன்பன்
**G. கோபாலகிருஷ்ணசெட்டியார்**

வைசிய குல சிரோன்மணி, வாணிகத் தலைவர்

**திரு V. K. நாகரத்தினம் செட்டியார் அவர்களின்**

# வாழ்த்து

கலைமகளின் அருளையும், திருமகளின் அருளையும், ஒருசேரப் பெற்ற நம் அருமைத் தம்பி எழுதிய மகா காவியம் 'கண்ணன் கருணை'.

சிறுவர் முதல் அனைவரும் படிக்கும்வண்ணம் எளிய தமிழில் அழகான பக்திக் காவியம். புத்தகத்தை எடுத்தால் முடியும் வரை கீழே வைக்க முடியவில்லை.

தம்பி கே. ஜி. கோபால் அனைத்து செல்வமும் பெற்று நீடுழி வாழ வாழ்த்தும்,

அன்பன்,

செவ்வாய்ப்பேட்டை
சேலம்.

V. K. நாகரத்தினம்செட்டி

# வாழ்த்துரை

**B. C. கோவிந்தன்,**
நிலக்கிழார், தேவா நார் தொழிற்சாலை,
வாணியம்பாடி மெயின் ரோடு,
பர்கூர், தருமபுரி மாவட்டம்.

எம் அருமை நண்பர் மல்லப்பாடி கே. ஜி. கோபால் அவர்கள் இம்மாவட்டத்தின் தலைசிறந்த எழுத்தாளர்.

சமூக நாவல்களையும், குடும்ப நாவல்களையும் எழுதியதுடன் இறைமை நூல்களையும் எழுதியுள்ளார். இவர் எழுதிய 'ஸ்ரீ வாசவி ஜனனம்' அருள்மிகு திருமலா திருப்பதி தேவஸ்தானத்தில் ரூ. 5,000/- பரிசு பெற்று புகழ் பெற்றது.

இப்போது பரமாத்மாவான ஸ்ரீ கிருஷ்ணனின் லீலைகளை அனைவரும் பாராட்டும்படி அவ்வளவு அழகாக எளிமையாக எழுதியுள்ளார்.

கலைவாணியின் பூரண அருள் பெற்ற நம் கோபால் அவர்கள் 'கண்ணன் கருணை' மூலம் இன்னும் புகழ் பெற்று விட்டார். இது தர்மபுரி மாவட்டம் மட்டுமல்ல தமிழகம் முழுதும் பெருமை கொள்ளும் அளவு உயர்ந்துவிட்டார்.

கண்ணனின் காளிங்க நடனம், விஸ்வரூப தரிசனம் அவரது கீதை யாவும் மெய்சிலிர்க்கும்படி எழுதியுள்ளார்.

கண்ணன் எம்பெருமானை வர்ணித்த நம் அன்பு நண்பர் கோபால் அவர்கட்கு கண்ணன் அனைத்து வளங்களும் செல்வங்களும் அருளும்படி பிரார்த்திக்கின்றேன்.

அன்புடன்,
**B. C. கோவிந்தன்**

# கண்ணன் கருணை



எழுதியவர் :

**கே. ஜி. கோபால்,**

மல்லப்பாடி-635 104,

(வழி) பர்கூர்,

கிருஷ்ணகிரி வட்டம், தருமபுரி மாவட்டம்.

# கண்ணன் கருணை

## அத்தியாயம் ஒன்று

பகவான் கண்ணன் கீதையிலே "எப்போது அதர்மம் தலை தூக்கி தர்மம் தலை குனிகிறதோ, அப்போது நான் தர்மத்தைக் காக்க அவதாரம் எடுக்கிறேன்!" என்று கூறினார்.

பகவானின் கருணை மழையை யார்தாம் அவதானிக்க இயலும்? சில சமயம் அவன் தர்மத்தைக் காக்க அதர்ம வழியை மேற் கொள்வதாய்த் தெரியும். ஆனால் அது எப்படிப்பட்ட வழி என ஞானிகளுக்கு மட்டுமே புரியும்! நாம் அவனை வைவோம்! ஆனால் அதன் பூர்வாசிரமத்தை அறிந்தால் அது அவனுடைய சித்து விளையாட்டு... தர்மத்தைக் காக்க மேற்கொண்ட இரண சிகிட்சை என்று அறியலாம்.

முதலில் பரந்தாமன் கண்ணனின் பிறப்பிலிருந்தே நோக்குவோம். பிறந்த அவன் குழந்தையாக யசோதை யிடம் வளர்ந்து கொண்டிருக்கிறான். அவன் செய்யும்

குறும்புகள் ஏராளம் – ஏராளம்! கோபியர் வீடுகளில் சென்று பால் வெண்ணை என்று திருடித் தின்பான்! வசமாக மாட்டிக்கொண்டாயா கிருஷ்ணா என்று அவனை அந்த வீட்டிலே கட்டி வைப்பாள் அந்த கோபிகா ஸ்திரி!

கண்ணன் மிகவும் சாதுவான குழந்தை போல கட்டுண்டு இருப்பான்! இதே போல மற்ற வீடுகளிலும் அதே நேரம் அவனைக் கட்டி வைத்துவிட்டு யசோதையிடம் புகார் சொல்வார்கள்.

" என்னம்மா யசோதா – இதோ பார் உன் மகனின் சாயம் வெளுத்துவிட்டது. கையும் களவுமாக வெண்ணை திருடும் போது பிடித்து எங்கள் வீட்டில் கட்டி வைத்திருக்கிறேன். வா அவனைப் பார்க்கலாம்! என்று ஒருத்தி அழைக்க – இதென்ன கூத்து? இப்போது நான் என் வீட்டில் கட்டி வைத்திருக்கிறேனே என்று மற்றவர் கூவ, அங்குள்ள பெண்கள் அனைவருமே இப்படி கூவ, யசோதா திகைத்து " சகோதரிகளே எனக்கு ஒரு கண்ணன் தான் உண்டு! இத்தனை கண்ணன்கள் யார் – தெரிய வில்லையே - என்று கூறி ஒவ்வொரு வீடாகச் செல்ல, முதல் பெண் வீட்டில் அவள் கணவன் கட்டிலோடு சேர்த்து கட்டப்பட்டுள்ளது கண்டு அதிர்ச்சியடைகிருள்!

தானே கண்ணனைப் பிடித்து தன் கைகளினுலேயே கட்டியது தன் கணவனையா? அது கண்ணனுகத்தானே இருந்தான்! அவள் மதி மயங்குவான்!

அடுத்த இல்லக்காரியோ தனது மகனைக் கட்டி வைத்துள்ளாள். அப்படியாயின் தான் கண்ணுரக்கண்டு, பிடித்துக் கட்டியது கண்ணனை இல்லையா? இதென்ன தன் கண்கள் பொய் கூறுமா?

அப்படியானால் ... ... ...

கட்டியது கண்ணனைத்தான்! ஆனால் அந்த முரளீதரன் பரம்பொருளல்லவா? அவனை யார் அறிய முடியும்? இங்கும் அங்கும் எங்கும் இருப்பவன் அவன் ஒருவனல்லவா?

அப்பெண்கள் ஞானோதயம் பெற்றவராக பரந்தாமன் கண்ணனை அறிகின்றனர்! அவர்கள் அழகிய செங்கைகள் குவிந்து வணங்குகிறது! கண்கள் மழை போல கொட்டுகிறது!

"ஹே முராரீ! நீ விளையாட நான் கிடைத்தது எனது பிறவி இன்பம்! முகுந்தா! ஜனார்தனா! வனமாலி பச்சை மாமேனியானே! சரணம் சரணம் நின்தாள் பரந்தாமா!" அழுதபடியே அவன் முன் சென்று கால்கள் மண்டியிட்டு வணங்குவர்!

அவனோ எல்லையற்ற அந்த தெய்வீக புன்னகையை அவர்கட்கு பரிசாக அளிப்பான்!

இன்னொரு நிகழ்ச்சி — ஜெகன்னாதனின் திருவிளையாடலை தேவரும், அசுரரும், மக்களும், மாக்களும் புரிந்து கொள்ள ஓர் அற்புதம்!

அன்று யசோதா தன் சினேகிதியின் தங்கை திருமணத்திற்கு செல்ல வேண்டும். பக்கத்து வீட்டு பெண்ணை தனது கண்ணனுக்கு துணையாக விட்டுவிட்டு அவனைப்பத்திரமாக பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு திருமணத்திற்குச் சென்றாள்!

தன்னுடன் கண்ணனையும் அழைத்துச் சென்ருலோ அவன் திருமண வீட்டில் என்னென்ன செய்வானே?

அதற்குப் பயந்தே தன்வீட்டில் விட்டுவிட்டு காவலுக்கு பக்கத்து வீட்டுப் பெண்ணை வைத்து விட்டுச் சென்ருள்! அந்தப் பெண் கண்ணனிடம் கண்ணு ஏதாவது குறும்புகள் செய்தால் தெரியும் சேதி! என்று கண்களை உருட்டி விழித்தாள்! பதிலுக்கு கண்ணனும் அவளை விழித்துப் பார்த்தான்! சே! என்ன பையன் இவன்? அலுத்தபடி உள்ளே சென்ருள் அவள்.

கண்ணன் சும்மா இருப்பாளு? அவள் உள்ளே சென்றதும் தன் கைவரிசையை காட்ட ஆரம்பித்தான்! வெளியே தோட்டத்திற்கு வந்து ஈரமண்ணை பிடிப்பிடியாக உருண்டையாக்கி சுவைத்துத் தின்ன ஆரம்பித்தான்! உலகையே படைத்த ஜகன்னுதன் தன் படைப்பு சுவையாக உள்ளதா என்று ருசிபார்க்க ஆரம்பித்தான்!.

வேண்டிய மட்டும் மண்ணைத்தின்றுவிட்டு வாயில் மண்கரையுடன் உள்ளே வந்தான்! அதைப்* பார்த்த காவலிருந்தப் பெண் ஐயோ, என்னடா - மண்ணை தின்றே? உன் அமமா வந்தால் என்னை லேசாய் விட்டுடமாட்டாளே/ கத்தியபடி வாயை திறடா என்று கேட்க, கண்ணன் தலையாட்டினுன்!

ஐயோ, நிறைய மண்ணை தின்றிருப்பான் போலுள்ளதே! அவள் தனது விரலை அவன் வாய்க்குள் விட்டு துழாவினுள்! மண் இருக்கிறதா என்று! ஆனுல் எதுவுமே இல்லை!

திடீரென அவள் வீல் எனக் கத்தினுள். அவள் கைவிரலை கண்ணனின் பற்கள் பதம்பார்த்தன! உதறிய

படியே வெளியே எடுத்த அவள் விரலில் கண்ணனின் பற்கள் பதிந்திருந்தன! ரத்தம் ஒழுகியது!

இங்கே... நான் ஒன்று சொல்வேன்! நந்தலாலா! உன் பல் கடித்து உதிரம் சிந்திய அப்பெண் எத்துனை பாக்கியசாலி! யுகாயுகங்களாக உன் தரிசனத்தையும் உன் ஸ்பரிசத்தையும் வேண்டி எத்துனை கோடி பேர்கள் தவம் செய்கின்றனர். ஆனால் பிரபு! அந்த ஏழை இடைப்பெண் எத்தனை பாக்யம் செய்தவள்! காட்டிலே சென்று கடுந்தவம் புரிந்து மேலெல்லாம் புற்று வளர்ந்து பின் உன் தரிசனத்தை அடையும் அந்த சிரமத்தை அந்த அபலைக்கு அளிக்காமல்-எல்லையற்ற உன் ஸ்பரிச சுகத்தை அப் பெண்ணுக்கு அளித்துவிட்டாயே - முராரீ!''

அப்பெண்ணுக்கு கண்ணன் மேல் கோபம்! ஆனால் அவளே ஞானியாக இருப்பாள் எனின் கண்ணனின் பற்கள் பதிந்தமைக்கு எத்துனை இன்பம் துய்த்திருப்பாள்?

* * * *

மறுநாள் யசோதா வந்தாள்! கண்ணனின் குறும்பை அப்பெண் ஆதாரத்துடன் காட்டினாள்! அவளை சமாதானப்படுத்தி அனுப்பினாள் யசோதா!

அவனைக் கையும் களவுமாய் பிடிக்க சமயம் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் கண்ணனோ அவளின் முன்னால் மிக நல்ல பிள்ளை போல நடந்துகொண்டான்!

ஒரு நாள் அதற்கு வேளை வந்தது! அவ்வூரிலே ஒரு கழைக் கூத்தாடி வந்து வித்தைக்காட்டிக் கொண்டிருந் தான். இடைப்பெண்கள் எல்லாம் அதைப்பார்க்கச் சென்றனர். இதை சாக்காக வைத்து கண்ணனை பிடிக்க அவள் தந்திரம் செய்தாள்!

"கண்ணு... கொஞ்சநேரம் .. இங்கே பையன்-களுடன் விளையாடிக்கொண்டிரு! இதோ வந்துவிடுகிறேன்!" என்று கூறிச் சென்றாள்! கண்ணன் பக்கத்து வீட்டு தம் நண்பர்களுடன் கண்ணாமூச்சி விளையாடியபடி இருந்தவன்... திடீரென அவர்களை அழைத்து தோட்டம் சென்றான்! ஈரமண்ணை உருண்டையாக்கி அவர்கட்கும் தந்து தானும் வயிறார உண்டான்!

உள்ளே மறைந்திருந்த யசோதா சட்டென ஓடி வந்தாள் தோட்டத்திற்கு! அவளைப் பார்த்ததும் சகாக்கள் எடுத்தனர் ஓட்டம். கண்ணனைப் பிடித்த அவள், போக்கிரி! இப்போது மண்ணைத்தானே தின்றாய்? வகையாக மாட்டிக்கொண்டாயா? எங்கே வாயைத்திற என்று அதட்டினாள்!

மென்றபடியே கண்ணன் முடியாது என்று தலையாட்டினான். ஆனால் அவள் விடவில்லை பலவந்தமாக அவனது வாயைத் திறந்தாள்!

உள்ளே ... ... ...

அகலமாக வாய் திறந்தது ........ எங்கே மண் உளது என்று உன்னிப்பாக கவனித்தாள் யசோதா! அந்த வாயிலே,

"கீதையின் நாயகனே! அதை எப்படியடா சொல்வேன்? அண்டங்களும் உலகங்களும் சூரியன்களும் சந்திரரும், நெருப்பும், பர்வதங்களும் அனைத்துமே சுழன்றபடி தெரிந்தன! சமுத்திரங்களிலே ஆதிசேடன் மேல் படுத்தபடியே நீ அன்னை லக்ஷ்மிதேவியுடன் சயனிப்பதைக் காண்கிறேன்!"

''மதுசூதனா! உனது கிருத்யுகம், திரேதாயுகம், துவாபரியுகம் யாவும் இதோ நான் காண்கிறேன். உன் விஸ்வரூபத்தரிசனம் இதோ காண்கிறேனடா... உனது சிரசுகளையும், பருவாய்களையும், நெருப்புக் கண்களையும், யானைத்தந்தம் போன்ற கோரைப் பற்களையும், வெட்டிய பச்சை ரத்தத்துடன் அசுரர்கள் தலைகளையும் இதோ உன் கரங்களிலே காண்கிறேன்......

கண்ணா கருமைநிற மன்னா! உன் சக்ராயுதம் அதோ அதர்மக்காரரைத் துரத்தித் துரத்தி வீழ்த்துகிறதே!

கோவிந்தா... பாண்டுரங்கா! போதுமடா... உன் வாயை மூடிக்கொள்! பரந்தாமா! கரங்கள் கூப்பிய படியே கண்கள் மூடியபடி கண்ணீர் புரள பரந்தாமனை ஜெபித்துக் கொண்டிருந்தாள் அன்னை யசோதா!

* * * *

அவனது எல்லையில்லாத விளையாட்டுகளை ஞானி களும் துறவிகளும் அறிவர். ஆனால் அவனது தர்ம பரிபாலனத்தை பாமரரும் அறிகின்றனர்.

இதோ ஓர் எடுத்துக்காட்டு!

மாடுகளை மேய்த்துக் கொண்டு கண்ணன் தன் தோழர்களுடன் கானகம் செல்வான். கொஞ்சம் பெரியவன் ஆகிவிட்டான் அல்லவா? அன்றும் அப்படியே மாடுகளை மேய்த்தபடி யமுனா நதிதீரம் சென்றான். மாடுகளை விட்டு விட்டு தனது அமுதகான வாத்யமான புல்லாங்குழலை இசைக்க ஆரம்பித்தான்.

'' மனிதனே! நீ நாரதரின் வீணையும் கலைவாணி யின் கானத்தையும் நந்தியின் மத்தாளத்தையும் கேட்டுள்ளாயா? அது தேவையே இல்லை — இதோ எம்

பெருமான் கண்ணன் இசைக்கும் முரளி மோகன புல்லாங் குழல் கானத்தை மட்டும் கேட்பாயாக!

அப்போது நீ இந்த ஸ்தூல மனித தேகத்தை விட்டு நித்யமான இசை உலகிலே—காலை ஹரியிலே கலந்துவிடுவாய்! அவனது வேய்ங்குழல் நாதம் முன் உன் ஆத்மா, உயிர் பஞ்சேந்திரியங்கள் பிரபஞ்சம், அண்டம், மும்மூர்த்திகள் யாவும் தூசுபோலாகிவிடும்!

அவனது வேய்ங்குழலை—இசைத்தத்துவத்தின் கானுமிர்தத்தை மனிதர்கள் மட்டுமல்ல தேவர் மூவரும், விண்ணவரும், துறவிகளும், மாக்களும், பறவைகளும் தன்நிலை மறந்து கேட்கும்! இயற்கையே ஆடாமல் மரங்கள் அசையாமல் கேட்கும்! சமுத்திரங்கள் அலைகளை விடாது! மலைகள், கானகங்கள், ஆறுகள் ஏன் அனைத்தும் அந்த சக்திக்கு தலை வணங்கும்!

அன்றும் அப்படியே அந்த யமுனை நதிதீரம் சர்வ அமைதியால் மூழ்கிக் கிடந்தது! இமாசல பர்வதத்தின் தலைவி அன்னை பார்வதி தன் அண்ணனின் வேய்ங்குழலை கேட்க கோபிகாஸ்திரியாக வந்து எதிரே நின்று உள்ளம் உருகக் கேட்கிறாள்.

அவனைத்தேடி—சங்கரனும் வந்து அவனும் நாதவசப் பட்டு தன் மனைவியருகே இவ்வுலகையே மறந்தபடி கேட்கிறான்! அதுபோல பிரமதேவன் வாணியுடனும், அஷ்டதிக்குப் பாலரும், தேவரும், கின்னர் கிம்புருடரும், மிருகங்கள், பறவைகள், மனிதர் யாருமே வந்து நின்று தங்களையே மறந்து கேட்கின்றனர். அந்த ஜீவ கீதத்தை!

இசை முடிகிறது — அனைவரும் தத்தம் நிலை உணர்ந்து செல்கின்றனர். மரங்கள் அசைகிறது! காற்று வீசுகிறது! இயற்கை செயல்படுகிறது. சிவனும் பார்வதியும் வெட்கப்பட்டு கண்ணனை வணங்கியபடி கயிலைக்கு செல்கின்றனர்.

"ஓ தேவ தேவா! முராரி! என் நெஞ்சையே பறிகொள்ளும் அந்த ஜீவகீதம் இசைக்க உனக்கு யார் ஐயா சொல்லிக் கொடுத்தார்கள்?"

ஐயனே !

நீ ஊதும் புல்லாங்குழலாகவாவது நான் பிறக்கக் கூடாது? உன்கரங்களும் அழகிய உதடுகளும் என்னைத் தீண்டுமே! என் ஜன்ம பாபங்கள் நீங்கி நித்திய ஜீவனை அடைவேனே கண்ணா!"

—என்று பிருகுரிஷி பாடியதில் தவறு என்ன?

## காளிங்க நடனம்

'காளிங்கன்' என்று ஒரு அரக்க அரவம். அது செய்யும் தீமைகள் சொல்ல முடியாது. நாகலோகத்தை விட்டு பூமிக்குவந்து—பசுக்கள், கன்றுகள் முதலியவற்றை உயிருடன் விழுங்கும். எதிர்க்கும் இடையர்களைக் கொல்லும். அவர்கள் எம்பெருமானிடம் முறையிட்டனர்.

கோவிந்தா 'துஷ்ட நிக்ரகம் செய்யவே நீ வருவாய்' என்று பிரபந்தங்களிலே படித்தோம். இரண்ய, ராவண, கும்பகர்ண அரக்கர்களை வென்று அழித்தவனே, சக்ரா

யுதத்தை கொண்டவனே, பெரிய பெருமானே! பழனி முருகனின் மாமனே! இந்த காளிங்கனை அழித்து எம்மையும் எம் ஆவினங்களையும் காத்திடுவாய் தயாநிதி! என்று நாடோறும் அந்த நாராயண மூர்த்தியை துதிப்பர் அந்த இடைச்சேரி மக்கள்!

இப்போது கண்ணனின் வேய்ங்குழல் நின்றது. திடீரென அம்மா என்ற அலறல்! கண்ணனின் பிரிய கன்றுக்குட்டியான தேவகியின் அலறல்தான் அது! அது அலறியபடியே எங்கோ இழுத்தடித்துச் சென்றபடியிருந்தது! ஆம்! காளிங்கன்தான் அதை நதி ஓரத்திலிருந்து கவ்விக் கொண்டு யமுனைக்குள் பாய்ந்திருந்தது! பக்தகோடிகளே! உங்கள் இதயத்தை எம்பெருமானின் உறைவிடமாக மாற்றிக் கொள்ளுங்கள்! உங்கள் கரங்கள் தலைக்குமேல் குவியட்டும்...

பாடுங்கள்... நந்தநந்தனா... பிரபுல பதிபாவனா... வெண்ணெய் திருடியவனே! தர்மத்தைக் காப்பவனே... ஸ்ரீமத் பகவத்கீதையை அருளியவனே! பாடுங்கள்! ஆடுங்கள்! அந்தப் பரம்பொருளை எண்ணியெண்ணிக் களிப்புறுங்கள்!

இதோ என் ஐயன் அந்த காளிங்கனை வதம் செய்யப் புறப்பட்டுவிட்டான்! இதோ அந்த துஷ்ட நாகத்தின் தலை மேல் ஏறிநின்று அதை அடக்குகிறார்! —இதோ அதன் 7 தலைகள் மேல் ஊழி நடனம் ஆடுகிறாரே!

இதோ... சப்த சமுத்திரங்கள் பொங்குகிறதே! உலகம் அல்லோலகல்லோலப் படுகிறதே! எரிமலை வெடிக்கிறதே! தேவாதிதேவரும், அஷ்டதிக்குப் பாலரும், அரக்கரும், மக்களும் நடுநடுங்கி நிற்கின்றனரே! இதென்ன ஊழித் தாண்டவமா? ஹரே முராரீ! அபலை மீராவைக் காத்தவனே! சாந்த சக்குபாய்க்கு முக்தியளித்த பண்டரிநாதனே!

முப்பது முக்கோடி தேவரும் கைத்தொழ, விண்ணகம் அதிர, கின்னரர், கிம்புருடர் வாத்தியங்கள் இசைக்க நீ ஆடுகிறாய்! இவ்வுலகம் ஆடுகிறது! உன் உளம் சார்ந்த பகவான் சங்கரன் இதோ தம் பார்வை பார்வதியுடன் ஆட ஆரம்பிக்-கிறார்!.

ஓ உலகமே! உனக்கு முடிவு காலம் நெருங்கி விட்டதா? இருபெரும் தெய்வங்கள் ஊழிக் கூத்து ஆடு கின்றதே? இனி உன்னை யார் காப்பாற்றுவார்?

இல்லை. பகவான் கண்ணன் நல்லவன்! தர்மத்தைக் காப்பவன்! இதோ அந்தத் துர்க்குணம் கொண்ட காளிங்கன் அவரிடம் சரணடைந்துவிட்டான்! தன் தவறுக்கு வருந்தி அடிபணிகிறான்!

தர்ம சாஸ்தா அவனை மன்னிக்கிறான்! ஆவேசம் அடங்குகிறான்! நடனம் நிற்கிறது! சங்கரனின் தாண்டவ மும் முடிகிறது! உலகம் நிலைக்கிறது! உயிர்கள் இயங்குகிறது!

ஆயர்பாடியிலே...... ஆயர்களையும், அவர்களது ஆவினங்களையும் காத்து தர்மத்தை நிலைநாட்டும் அந்த மதுசூதனன் வெளி உலகையும், தன் அடியார்களையும் கவனித்து ரக்ஷிக்கத் தவறுவதே இல்லை! இதோ அவனது மற்றொரு கருணை!

கண்ணனும் குசேலனும் பால்ய நண்பர்கள். குரு-குலக் கல்வி ஒன்றாகப் பயின்றவர்கள். பிராண சிநேகிதர் கள். கல்வி முடிவுற்றதும் கண்ணன் தனது துவாரகைக்கு வருகிறான். குசேலர் தம் இருப்பிடம் செல்கிறார்!

பரந்தாமனுக்கு எப்போதும் தன் அடியாரை சோதித்து அவர்கட்கு நற்பலன்கள் அளிப்பதிலேதான் திருப்தி. குசேலன் தன் அடியான் மட்டுமல்ல! இளவயது நண்பன்! அவனிடமும் விளையாடுகிறன் எம்பெருமான்!

அவனுக்கு 27 குழந்தைகளையும், பயங்கர வறுமை-யையும் தந்திட்டான்! குசேலன் எப்படி தன் குடும்பத்தைக் காப்பான்? ஒரு வேளைக்கு 29 பேர் கொண்ட குடும்பத்திற்கு அன்னம் அளிக்க வேண்டும். ஆனல் அவன் மகா பக்திமான்!

தன் இதயத்தை கோயிலாக்கி அங்கு கண்ணனைப் பிரதிட்டை செய்துவிட்டான் அவன். மனைவி சுசீலா மகா பதிவிரதை! அவளாலும் இந்தக் கோர வறுமையைத் தாள முடியவில்லை! ஒரு நாள்... தன் கணவரைக் கேட்கிறள்!

ஸ்வாமீ, தங்கள் இதயத்திலே வீற்றிருக்கும் தங்கள் நண்பர் ஸ்ரீ கிருஷ்ணனிடம் துவாரகை சென்று நம் நிலைமை கூறி உதவி பெற்று வாருங்களேன்!

அப்போது குசேலரோ, ''சுசீலா ஆப்த நண்பனிடம் நிதியுதவி கேட்டால் நட்பு போய்விடும்! எங்கள் அன்பு அதற்கு அப்பாற்பட்ட நட்பு! உதவி கேட்க ஏற்பட்டதல்ல!'' என்று மறுக்கிறர். ஆனல் சுசீலா, 'இல்லை சுவாமீ! அவர் அனைத்தும் அறிந்தவர். நீங்கள் நேரில் சென்றுலே உள்ளம் அறிந்து உதவி செய்வார்!' என்று வற்புறுத்தி கண்ணனிடம் அனுப்ப ஏற்பாடு செய்தாள்!

ஆனல் ஆப்த நண்பனிடம் வெறுங்கையாகவா அனுப்புவது? பல நாட்கள் பிக்ஷை மூலம் சேர்ந்த அரிசியை அவலாக்கி அதை ஒரு கந்தையிலே முடிந்து கணவரை அனுப்பி வைக்கிறள் அந்த மாதரசி!

கல்லிலும், முள்ளிலும் அடிபட்டு நடந்து துவாரகை அடைகிறார் குசேலர்!

ஆனால், அது மாமன்னன் கண்ணனின் ராஜ்யம் ஆயிற்றே! கந்தல் உடை குசேலனை உள்ளே விடவில்லை வாயிற்காவலன்! "ஐயா, உம் மன்னர் எமது ஆப்த நண்பர்! பள்ளிப் பருவத்து பால மித்ரர்கள் நாங்கள்! சென்று நான் வந்திருப்பதாக உம் மன்னரிடம் கூறுவாயாக!" என்று சொன்ன குசேலரை ஏளனம் செய்து "ஏ பண்டாரம் நீரா எம் மன்னரின் ஆப்த சிநேகிதர்? போ வெளியே..." அவரைப் பிடித்துத் தள்ளுகிறான் துவாரபாலகன்.

கண்ணனுக்கா இது தெரியாது? விரைந்து வந்து குசேலரை விழாமல் தாங்கிப் பிடிக்கிறார்! துவாரபாலகன் நடுங்கி மன்னிப்பு கேட்கிறான்.

"என் உயிரினும் இனிய குசேலா! ஒரு வார்த்தை சொல்லி முன்கூட்டியே எனக்கு தகவல் அனுப்பியிருந்தால் இந்த சிரமம் உனக்கு ஏற்பட்டிராதே! நானே உன்னை உன் இடத்திலிருந்து ரதத்தில் அழைத்து வந்திருப்பேனே!" என்று உள்ளமுருக கூறியவன், பூரண கும்ப மரியாதையுடன் குசேலனைத் தன் அரண்மனைக்கு அழைத்துச் செல்கிறான்!

அங்கே அவன் கனவில்கூட எண்ணாத மாபெரும் வரவேற்பு கிடைக்கிறது. குசேலனுக்கு தான் காண்பது கனவா என்று பிரமிக்கிறான். அவனை அன்புடன் அணைத்த படியே ஒரு ஆசனத்தில் அமர்த்தி அவனது கால்களைக் கழுவி தன் தலையிலே வர்ஷித்துக் கொள்கிறான் எம்பெருமான் கண்ணன்! பக்திக்கு இறைவனும் அடிமைதானே? அப்போது காலிலே தைத்திருந்த ஒரு முள்...... கண்களில் நீர்பெருக அதை நிதானமாய்ப் பிடுங்கி எறிகிறான் கண்ணன்!

''குசேலா......' இந்தப் பாவியைச் சந்திக்கக் கல்லி-லும், முள்ளிலும் நடந்தா வந்தாய்? என்ன காரியம் செய்துவிட்டாய் நண்பா?'' நாத்தழுதழுக்க அவன் கேட்டதும் கண்ணனின் பத்தினிகள் ருக்மணியும், பாமாவும் அழுதே விட்டனர். குசேலா, வீட்டிலே என் அண்ணியும், உன் குழந்தைகளும் நலமா?'' விசாரிக்கிறன்!

என்ன சொல்வான் குசேலன்! எதைச் சொல்வான்? வறுமையையா? துயரத்தையா? மௌனமாகத் துன்பத்தில் ஆழ்ந்தபடி இருக்கிறன்... ''சரி குசேலா, நெடுநாள் கழித்து என்னைக் காண வந்திருக்கும் உன்னிடம் என் அருமை அண்ணி என்ன கொடுத்தனுப்பினுள் எனக்கு?'' ஆவலாக அவனைக் கேட்டுச் சோதிக்கிறன் கண்ணபிரான்.

வெட்கப்பட்டு – கந்தலை மறைத்தபடி ''இந்த அவலை கண்ணனுக்கு எப்படிக் கொடுப்பேன் என்று மனம் புழுங்க, அதை மறைக்கிறன் குசேலன்! ஆனல் மூவுலகும் முக்காலமும் உணர்ந்த ஹரிக்கு எது தெரியாது?

இதோ... என் அண்ணியின் பரிசு! கண்டுபிடித்து விட்டேன்! கந்தல் துணியை அவிழ்த்தான்! ஒருபிடி அவலை எடுத்தான்! தன் வாயிலே போட்டுக்கொண்டான்!

''ஓ உலகத்தின் மாந்தர்களே...... ஹரியின் லீலை களை நினைத்துப் பாடுங்கள்... ஆடுங்கள்... இதோ அவனது ஒரு பிடி அவல்... இந்த உலகையெல்லாம் குசேலனுக்கு அடிமையாக்குகிறது! இதோ அடுத்த பிடி அவல்...! தேவ லோகம்; தேவர்கள் யாவரும், யாவும் குசேலனுக்கு அடிமை ஆகிவிடுகிறது!

இதோ அடுத்த பிடியும் எடுக்கிறுன் கண்ணன்! பார்க்கிறுள் ருக்மணி! ஓ... அடுத்த பிடி உண்டால் கண்ணனே குசேலனின் அடிமை! சட்டென அதைப் பறித்து தான் உண்கிறுள் ருக்மணி! "பிரபு இந்த சௌபாக்யங்கள் தங்கள் நண்பருக்குப் போதும்" கைகூப்பி அவனைத் தொழுகிறுள் ருக்மணி.

இந்த நாடகம் எதுவுமே புரியவில்லை குசேலனுக்கு! என் நண்பன் எதுவுமே எனக்குத் தரவில்லையே என்ற குறை-யுடன்தான் கண்ணனிடம் விடை பெற்றுன்.

ஆனல், ஊர் நெருங்க நெருங்க தன் குடிசை இருந்த இடத்தில் ஒரு பெரிய மாளிகை! அதை நிர்வகிக்க சேவகர்கள் இருக்கக் காண்கிறுன்! இது யார் மாளிகை? எங்கே நமது மனைவி குழந்தைகள்?

பட்டாடையுடனும், வைர அணிகளுடனும் மாடியிலிருந்து இறங்கி ஓடி வருகிறுள் சுசீலா! "ஸ்வாமீ வந்து விட்டீர்களா? இதோ பார்த்தீர்களா! இந்த பட்டு, வைரம், மாளிகை... இவ்வளவும் நமதுதான்! ஏன் ஸ்வாமி இவ்வளவு ஐஸ்வரியம் ஏது? தாங்கள் சென்ற மறுநாளே 10 ஒட்டகங்கள் மீது இந்த ஐஸ்வரியம் எனக்கு வந்தது. தாங்கள் அனுப்பியதாகக் கூறினுர்கள்! அதிலே ஒருவர், இதோ இம்மாளிகையை எதிர் வீட்டு ஐயாவிடம் வாங்கி எங்களை அழைத்து வந்தார். ஏது இவ்வளவு திரவியம்? இவ்வளவு நாட்கள் எங்கே வைத்திருந்தீர்கள்?

அவள் கேட்கக்கேட்டக, குசேலன் கண்களில் தாரை தாரையாக நீர் பொழிய "கண்ணு, என் தெய்வமே!" என்று

அலறியபடியே மீண்டும் துவாரகை நோக்கி ஓடினுன். தரித்ர குசேலன் பீதாம்பரதாரியான கண்ணனுல் குபேர குசேலனுக மாறியது எதனுல்?

உலக மாந்தரே' வறுமையைப் பற்றி எள்ளளவும் கவலைப்படாதீர்கள்! நம் பரந்தாமன் உங்கட்கு அள்ளியள்ளி கொடுப்பான் ஐஸ்வரியத்தை! ஆனால், நீங்கள் அவனை மட்டும் உங்கள் மனதில் வைத்து ஆராதியுங்கள்! சௌபாக்-கியங்களேயும், அஷ்ட ஐஸ்வர்யங்களேயும் அவன் உங்கட்கு அளிப்பான். அவன் நாமம் மட்டுமே உங்கள் நாக்கு பூஜிக்க கடவது. அவனே மட்டுமே உங்கள் கரங்கள் வணங்கக்கடவது சொல்லுங்கள், "கிருஷ்ண பரமாத்மாகீ ஜே!" சொல்லுங்கள் நெஞ்சின் ஆழத்திலிருந்து சொல்லுங்கள்!

* * * *

கண்ணனின் பிரியைதான் இராதை! அவன்மேல் உயிரையே வைத்துக்கொண்டு கண்ணனேயே தன் மனதில் எண்ணி, அவனே ஒரு கனமேனும் பிரியாமல் அவனுடன் இருப்பவள்தான் ராதை!

கண்ணனுக்கும் ராதை என்றுலே ஒரு மகிழ்ச்சி—ஆசை, ஆர்வம்! அவளேக் காணுமல் ஒரு நொடிகூட இருக்க மாட்டான். வெளியே சென்ருல் இருவரும் சேர்ந்தேதான் போவார்கள். யமுன நதி தீரத்திலே, இனிமையான மாலே நேரத்திலே தென்றல் உடலே முத்தமிட அன்று கைகோர்த்த படியே சென்றுகொண்டிருந்தனர் நமது ஐயனும்' ராதையும்!

"மணப்பிரபு .." ராதைதான் அழைத்தாள். பரந்-தாமன் புன்னகை செய்கிருன். "சொல் ராதா" வெட்கத்

துடன் தயங்குகிறுள் ராதை! 'இங்கே நான் மட்டும்தானே இருக்கிறேன்! தயக்கமின்றிக் கூறுவாய்!' என்று பகவான் மொழிய, ராதை 'என் மன்னவனே, தாங்களும், நானும் இனிமையான இந்த மாலையிலே இந்தப் புனித நதிதீரத்திலே பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் செல்ல வேண்டும்! அது தான் என் விருப்பம் மன்னு!'

முத்துப் பற்கள் பளீரென மின்னலடிக்க அனைவரை-யும் மயக்கும் அந்த மோகனச் சிரிப்பை உதிர்க்கிருன் எம் பெருமான். 'இதுதானே? நான் என்னமோ ஏதோவென்று பயந்துவிட்டேன். இதோ இப்போதே நம் நடனத்தைத் துவக்கலாமா?

கண்ணன் ராதையை அணைக்கிருன்! ராதை துடிக்கிருள்! முகம் சிவக்கிருள்! தன் அழகிய கால்களால் ஆட ஆரம்பிக்கிருள்! கண்ணனும் ஆடுகிருன்!

ஒ... தேவலோக நாட்டிய மாதர்களே! இதோ ஓடி வாருங்கள்! என் கண்ணன் தன் பிரியையுடன் ஆடுகிருன்! வந்து ஆசை தீரப் பாருங்கள்! ஓ பட்சிகளே! மயில்களே! அன்னங்களே, இந்த நாட்டியம் சாதாரணமானதல்ல! மூவுலகுக்கும் முதல்வன் கண்ணன் ஆடுகிருனே!

ஓ நாரதரே... அன்னை கல்யாணியே உங்கள் வீணை களை மூலையிலே எறிந்துவிடுங்கள். கண்ணனின் கானத்திற்கு முன்பு உங்கள் வீணை இசை எதற்குப் பயன்படும்?

சங்கீத வித்வான்களே! ராகங்களின் இனிமையை உணர்ந்த பண்டிதர்களே! இதோ வாருங்கள், நம் பெருமானின் கந்தர்வ கலா நாட்டியத்தைப் பாருங்கள்!

ஐயனும் ராதையும் ஆடினர்கள் பாடினர்கள்! இவ்வுலகம் ஆடியது, மரங்கள் ஆடியது, மயில்கள் ஆடியது. மாக்கள் ஆடின, மக்கள் ஆடினர்! நந்தி மத்தளம் கொட்டியது! வாணி வீணை இசைத்தாள்! கின்னர கிம்புருடர்கள் வாத்யங்கள் இசைத்தனர். யமுனை நதி ஆடியபடியே சென்றது! இந்த மகா நாட்டியக் கலாவிருந்தை அனைவருமே கண்டு களித்தனர். ஆம்! இவர்கள் இங்கே ஆடுவது நல்லவர்கள் அனைவருக்குமே தெரிந்தது!

இதோ...... ராதை பாடுகிருள்! 'புவியாளப் பிறந்தவனே... பூபாலா! நந்த கோபாலா......!' அவள் கரங்கள் கும்மியடிக்கின்றது. கால்கள் விரைந்து ஆடுகிறது. நம் ஐயனின் குரலும் சேர்ந்துகொள்கிறது. 'ராதே... ப்ரியே... மனோகரி...! அவள் இதைக் கேட்கிருள்! கண்களில் நீர் மல்க சிறிது நேரம் நாட்டியத்தை நிறுத்தி, மணாளனின் கால்களை தொட்டு வணங்குகிருள்! ஒரு கண்ணீர் துளி அவன் காலில் சூடாக விழ, துடிக்கிருன் பரந்தாமன்.

"என் பிராண சகியே! ஏன் இந்தக் கண்ணீர்?" முரளிதரனும் வேதனையுடன் வினவுகிருன். ராதை ஏதோ சொல்ல வாய் திறக்கிருள்! அதற்குள் எங்கிருந்தோ ஒரு சோகக் குரல்... அழுகின்ற ஓர் அபலையின் ஏழைமைக் குரல் "கிருஷ்ணு... கண்ணு... முராரீ... இந்த அபலையின் மானம் காக்க வா...... கிரிதரா...!

கண்ணன் நிற்கிறான். அவன் கண்கள் ஒரு நொடி மூடுகின்றன. கைகள் உள்ளங்கை விரித்து யாருக்கோ ஆசி கூறுகிறது. அவனது கண்களில் இலேசான கண்ணீர்! ராதை பதறுகிறாள்! துடிக்கிறாள்! மூவுலகுக்கும் முதல்வோனின் கண்களிலா கண்ணீர்! அவள் கண்களும் நீரைக் கொட்டின.

பரந்தாமா! முராரீ... அவள் கண்ணனைத் தொட்டு உசுப்புகிறாள்! சட்டென விலகுகிறாள்! பரந்தாமனின் உடலில் அக்னிப் பொறிகள் பறக்கிறது! பயந்து, கைகள் குவித்தபடி அவனை சில நாழிகை நோக்கினாள் ராதை.

சட்டென பரந்தாமன் முகம் புன்னகை செய்கிறது. கண்கள் பழைய அழகை அடைகிறது! இதையெல்லாம் பயப்பிராந்தியுடன் பார்த்தபடியே இருக்கிறாள் ராதை.

'ராதா... என் மேல் கோபமா?'

இல்லை பிரபு! உங்கள் லீலைகளை அறிய இந்த ஏழைச் சிறுமியால் இயலாது தயாநிதே! இதோ பார் ராதா! பரந்தாமன் கைகள் விரிந்தன. எதிரே ஒரு பாறை – அதிலே ஒரு கோரக் காட்சி நிழல் போலத் தெரிந்தது. ஒரு அபலை-யை ஒரு தூர்த்தன் மானபங்கம் செய்ய சேலையை அவிழ்க்கிறான். அவள் கைகளைக் குவித்தபடி கதறுகிறாள்!

'கண்ணா...' அலறியபடியே அவனைக் கட்டிக்கொள்-கிறாள் ராதா... பிரபு இந்த அபலையை அந்த முரடர்களிடம் இருந்து காப்பாற்றுங்கள்! அவன் காலிலே விழுகிறாள் ராதை! கண்ணன் அவளைத் தூக்கி, ராதா நான் இருக்கும் போது அதர்மம் எப்படித் தலைதூக்கும்? இதோ பார் இப்போது அக்காட்சி மாறுகிறது.

அந்த தூர்த்தன் அவிழ்க்க அவிழ்க்க வண்ண வண்ண சேலைகள் அவர் உடம்பு மீது வந்தபடியே உள்ளன! அம்மம்மா! எத்தனை வித வண்ணங்கள்? இப்போது அந்த மூடன் கை சலிக்கிறது. அவன் சேலைகளை விட்டுவிட்டு கீழே அலுப்புடன் சாய்கிறான்!

எல்லாம் தெரிந்து கொண்டாள் ராதா-பாஞ்சாலியை துர்சாதனன் - மானபங்கம் செய்ய - கண்ணன் அவள் மானத்தை காக்கிறான். தென்றலின் வடிவே... சேலைகளை சிருட்டித்து... அந்த பத்தினியின் மானம் க்காக்கிறான் முரளிதரன்!

கண்ணீர் கொட்ட பிரபு! ஏழுமலை வாசனே! அபலை மீராவைக் காத்தவனே! சக்குபாய்க்கு முக்தியளித்தவனே! காளிங்கனை அடக்கிய கருணாகரனே! நீயே என் தெய்வம்! நீயே என் இதய தெய்வம் - மெய்குழற கண்ணீர் சோர ஐயன் மேல் சரிகிறாள் ராதை! அந்த தெய்வீகப் புன்னகை யுடன் அவளை அணைக்கிறான் கீதையின் நாயகன்!

## அத்தியாயம் இரண்டு

சில வருடங்கள் கழிகின்றது. பரந்தாமன் முகத்-திலே ஏதோ வாட்டம். அன்று துணிந்து கேட்கிறாள் ராதை. ''கருணாநிதே! ஏன் சில நாட்களாக தங்கள் முகத்திலே வாட்டம்?'' ஐயன் மென்னகை புரிகிறார். 'ராதா, சிலநேரம் தர்மம் கீழிறங்கிப் போவது போலத் தெரியும். அது பொய், வெறும் அனுமானம்தான்!

புரியாது விழிக்கிறாள் ராதை!

கண்ணன் தொடர்கிறான், 'சூதாட்டத்தில் தோற்ற பாண்டவர் இப்போது அஞ்ஞாத வாசத்திலிருந்து வந்துவிட்டனர்! கவுரவர் பேச்சுப்படி அஞ்ஞாத வாசம் முடிந்து, பின் பாண்டவர் நாட்டைத் திருப்பித் தர வேண்டும்! ஆனால் அதர்யாத்மாக்களான துரியோதியானர்கள் 5 நாடுகள் அல்ல, 5 ஊர்கள் கூட தரமாட்டார்களாம்! தருமபுத்ரர் இன்று சேதி அனுப்பியுள்ளார்! அதுதான் தர்மம் கீழ் இறங்கி இருப்பது போலத் தோன்றுகிறது!" என்று கூறினான். மூவுலகுக்கும் மூத்தோன் கண்ணன் எம்பெருமான்!

* * * *

கண்ணன் தனது பட்டு பீதாம்பரம் குழல் சகிதம் அஸ்தினாபுரம் புறப்படுகிறான்! ராதைக்கோ உலகமே சூன்யமாகி விட்டது போல தோன்றுகிறது. தனது கோபாலனை சில நாட்கள் காண முடியாதே!

பாண்டவர் சார்பில் தூதுவனாக கௌரவரிடம் செல்கிறானே! அன்று கௌரவர் தலைநகரம் அமளிதுமளிப் படுகிறது. பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் வருகிறார். அவருக்கு பிரமாதமான வரவேற்பு கொடுக்கிறார்களாம் கௌரவர்கள்! கண்ணனுக்கு, கௌரவர் வரவேற்பும் விருந்தும் தருவதா? அர்சுனன் முகம் சுளிக்கிறான்! அப்படியென்றால் நமக்காக அவன் தூது செல்வது பொய்தானா? கௌரவர் மாய ஆடம்பர வரவேற்பில் மயங்கி கண்ணன் அவர்களுக்கு சாதகமாக காரியத்தை முடித்திடுவானோ?

ஐயம் பலமாக மோத தர்மபுத்திரனை நோக்குகிறான் பார்த்தன்

''தம்பி! ஜகந்நாதனின் இதயத்தை யார் அறிய முடியும்? அவன் செய்வது எல்லாவற்றிக்கும் நன்மை தான் தரும்! அவனது செயலை நாம் வரையறை செய்ய இயலாது" தர்மன் அமைதியுடன் பதில் அளிக்கிறான்.

புவியாளும் பூபாலனுக்கு மாபெரும் வரவேற்பை கௌரவர் தருகின்றனர். எல்லாம் சகுனியின் சூழ்ச்சி! துரியோதனனுக்கு பிடிக்கவே இல்லை! ''அந்த இடையனுக்கா இப்படிப்பட்ட வரவேற்பு?" சகுனிசிரித்தான்! துரியோதனா... பாண்டவர் சார்பிலே நாடு கேட்க வருகிறான் கண்ணன். அவனை நல்லபடி வரவேற்று உபச்சாரங்கள் செய்து வயப் படுத்தி நாம் காரியம் சாதித்துக் கொள்ளலாம்!"

''மாமா!... கத்தினான் துரியோதனன். அந்த இடைப்-பயலா மயங்குவான்? சரியான வேஷதாரி அந்த கண்ணன்'. அப்படியென்றால்... சகுனி சிரித்தான்! நம் திட்டத்திற்கு அவன் உட்படவில்லையெனில் சகுனியின்முகம் விகாரமாகியது அந்த நாமதாரிப்பயலை... சகுனியின் கரம்... கழுத்தின் குறுக்கே நீள்கிறது.

அனைவரும் சிரிக்கின்றனர்!

நகரெல்லாம் வரவேற்பு - தோரணங்கள் மா, கமுகு தோரணங்கள் - விதவிதமான கோலங்கள்! கீழே ரத்னக் கம்பளம் - சேடியர் மலர்களை வருஷிக்க 100 துரியோதனாதி-யரும் முகமன் கூற சாஸ்திரிகள் பூர்ணகும்பம் கொண்டுவர கண்ணனுக்கே அவர்களது வரவேற்பு தலை சுற்றுகிறது! ஆனால்... அழகிய உதடுகளில் ஒரு புன்னகை! வீதியெல்லாம் திரண்ட மக்கள் கூட்டம் - பகவான் கண்ணன் வாழ்க! தர்மத்தைக் காக்கும் மன்னன் வாழ்க!

''காளிங்கன் ஆணவம் அழித்த கோபாலன் நீடுவாழ்க! சக்ராயுதபாணி வாழ்க!''

அந்த நகர மக்களின் உண்மை அன்பில் மனம்லயிக்க கண்கள் பணிக்க அவர்களை ஆசீர்வதிக்கிறான் பரந்தாமன். அரண்மனைக்கு அழைத்து செல்லப்படுகிறான் பரந்தாமன். எவருக்கும் கிட்டாத உயர்ந்த வரவேற்பு கண்ணனுக்கு அரண்மனையில் கிட்டுகிறது. அந்த மாயதாரி தன் மனதுக்குள்ளே சிரித்துக்கொள்கிறான். விருந்து, ஆடல், பாடல் கேளிக்கை இன்னும் மதுவகை... கண்ணன் சுவைக்கிறான். மகிழ்கிறான்! மயங்குகிறான்! இல்லை மயங்குவதாக நடிக்கிறான்!

பிறகு நல்ல ஓய்வு - தூக்கம் அம்சதூளிகா மஞ்சம் சுகமான நித்திரை – மாயவன் கனவிலே கூட ராதை வருகிறாள்! ''மகாபிரபு! உங்கள் பணியிலே இந்த ஏழைப் பெண்ணை மறந்துவிட்டீர்களா? கண்கள் பனிக்க கேட்கிறாள் ராதை! கண்ணன் சட்டென விழிக்கிறான். அங்கே ராதை இல்லை. ஆனால் அடுத்த அறையில் இருவர் பேசும் குரல் கேட்கிறது!.

''மாமா, இந்த இடைப்பயலுக்கு சுரங்க மண்டபம் தயாராகி விட்டதா?" ஆமாம் துரியோதனா! ஆ மெள்ளப் பேசு. கிருஷ்ணனுக்கு உடம்பெல்லாம் காதுகள் கேட்டுவிடப் போகிறது! நாளை நம் திட்டப்படி அந்த புதிய மாளிகையில் சுரங்க மண்டபத்தின் மேல் பலகைகளை அமைத்து [அது இருக்கும் இடம் தெரியாமல்] அதன் மேல் மேடையில் அமர வைத்து அவனை பேசச்சொல்லலாம் நம் வழிக்கு வந்து பாண்டவர்க்கு ஒரு கிராமம் கூட இல்லை! ஏன்? ஒருவீடு கூட

இல்லை என தெரிவித்து அதை அவன் ஏற்றுக்கொண்டால் பிழைத்தான் இல்லையேல்... சுரங்க மண்டபத்தின் கீழுள்ள அகழியில் தள்ளப்பட்டு பயங்கர முதலைகட்கு இறையாவான் அந்த கோபாலன்!"

இருவரும் சிரிக்க கண்ணன் புன்னகைத்து மறுபடியும் படுத்து கண்களை மூடுகிறான்! அவர்கள் சப்தம் ஓய்ந்தது- வெளியேறிவிட்டார்கள் போலும்!

அடுத்த நாள்! கௌரவர்கள் கண்ணனுக்கு விருந்து பலகாரங்கள் பலமாகச் செய்தனர். பிறகு அரண்மனை-யிலுள்ள அமைக்கப்பட்ட ஒரு சித்திர மண்டபத்தில் 'விசேஷமாக' அமைக்கப்பட்ட மேடையிலே பொன் ஆசனத்திலே கண்ணனை அமர்த்தினர்! புன்னகையுடன் அமர்ந்தான் கோபாலன்!

சகுனி ஆரம்பித்தான்! "கண்ணா .. இத்தனை நாட்கள் கழித்து இப்போதாவது கௌரவர் மேல் உனக்கு பரிவு வந்திருக்கிறதே! இங்கே வந்திருக்கிறாய்!" என்று பொடி வைத்துப் பேசினான். கண்ணன் மெல்ல சிரித்தான். அது அதற்கு காலம் நேரம் வரவேண்டாமா, சகுனியாரே? "ஆமாம் காலம் வந்துவிட்டது. அதுதான் நீயும் வந்து இருக்கிறாய்!" சகுனி குறும்பாக பதில் அளித்தான்.

துரியோதனன் குறுக்கிட்டான். "மாமா... விஷயத்-திற்கு வருவோம்! கோபாலரை இங்கு வந்த நோக்கம் கேளுங்கள்! சகுனி கபடமாய் சிரித்துக்கொண்டே "ஏன் துரியோதனா நீ தான் கேளேன்! கண்ணன் உன்னை விழுங்கி விடவா போகிறார்? "இல்லை! நம் குலகுரு பீஷ்மரை கேட்க

சொல்வோம். அவர் சிறந்த கல்விமான்! அவர் கேட்பது-தான் சிறந்தது! சுயோதனன் கண்கள் பீஷ்மரை நோக்கு-கின்றன! பீஷ்மர் பேச ஆரம்பித்தார்.

கண்ணா! இப்போது நீ வந்த காரியத்தை கூறு! ஒருவேளை பார்த்து வெகுநாளாகிறது. துரியோதனனுடையாரை காணலாமென வந்தாயோ அல்லது? அழகாக சிரித்தான் பரந்தாமன். "பீஷ்மரே! தாங்கள் ஆசான்! தங்கட்கு தெரியாதது ஒன்றுமே இல்லை!" இருப்பினும் கூறுகிறேன்.

"சூதாட்டத்தில் தோற்றுப்போன பாண்டவர் பிறகு ஓராண்டு அஞ்சாத வாசம் மேற்கொண்டு யாராலும் கண்டு பிடிக்கப்படாமல் - இருந்து பின் அஞ்சாத வாசம் முடித்தால் பாண்டவர் நாட்டை அவர்கட்கு வழங்குவோம்! என்று அன்று துரோணர் மற்றும் திரிதராட்டினர் அனைவர் முன்னிலையிலும் கௌரவர் சார்பில் விதுர மகாராசா உரைத்தார். நீங்கள் அனைவருமே அதை ஆமோதித்து ஏற்றுக் கொண்டீர்கள்!" இப்போது துரியோதனன் குறுக்கிட்டான் நான் இந்த ஷரத்தை ஏற்றுக்கொள்ளவில்லை!"

"அப்படியா?" கண்ணன் கேட்டான்

ஏன் அன்றே அந்த சபையிலே நீ ஏற்கவில்லை என்று சொல்வது தானே?" என்னை யாரும் கேட்கவில்லை... நான் கூறவில்லை!" துரியோதனன் ஆணவமாக பேசினான். ' தவறு துரியோதனா... பொய் கூறுவதோ, பேச்சு மாற்றுவதோ மாபெரும் தவறு. அது க்ஷத்திரிய தர்மம் அல்ல!". போதும் கண்ணா உன் உபதேசம்... வந்த காரியம் கூறுங்கள்... சகுனி இடைமறித்தார்.

சரி, வந்த காரியத்தைக் கூறுகிறேன். அன்றைய முடிவு படி பாண்டவர் ஒரு ஆண்டு அஞ்சாத வாசம் வெற்றியுடன் முடித்துள்ளார்கள். பேச்சுப்படி அவர்கள் நாட்டைத்திருப்பி கேட்க பாண்டவர் சார்பிலே வந்துள்ளேன்!"

"நீ எப்போது எங்கள்பக்கம் பேசியிருக்கிறாய்? உனக்கு பாண்டவர்கள் தான் வேண்டியவர்கள்!" துச்சாதனன் இடித்துரைத்தான். கண்ணன் புன்னகைத்தான்! "நான் எவர்புறமும் இல்லே. தர்மத்தின் புறம் இருக்கிறேன்! தர்மம் அதர்மத்தால் சரியும்போது அதை தூக்கி நிறுத்த - நான் முயற்சிக்கிறேன்! அன்றும், இன்றும் தர்மபுத்ரர் தர்மத்தை கைவிடவில்லே!"

"அப்போது நாங்கள் தர்மத்தை கைவிட்டோம் என்கிறாயா?" கோபத்துடன் கேட்டான் துரியோதனன்! மாயன் கோபாலன் மாயப்புன்னகை செய்தான். "அது இன்னும் சில நாழிகைகளில் தெரிந்துவிடும்!"

சரி துரியோதனா... "பாண்டவர்க்கு நாட்டைக் கொடுக்கும் விழாவை எப்போது வைத்துக்கொள்ளலாம்?" கண்ணன்தான் கேட்டான். "நாடா? யாருக்கு பாண்ட-வருக்கா? நான் கொடுப்பதாக கூறவும் இல்லே! இப்போது கொடுக்கப்போவதும் இல்லே!"

துரியோதனா... இது தர்மம் அல்ல! தங்கள் விதுர சித்தப்பா... வேறு எவரோ அல்ல! உம்சார்பில் அன்று அவர் உறுதி கூறினார்... இப்போது நீ இப்படி பேசுவது முறையல்ல...!" கண்ணா... துரியோதனன் முறைத்தான்! "நிச்சயம் நாட்டைத் தரமாட்டேன்!"

சரி...5 பாண்டவர்க்கும் முழுநாட்டை தராதுபோயின் 5ஊர்களையாவது தாருங்கள்! 5ஊர்களா? 5வீடுகள் கூட அந்த துரோகிகட்கு தரமாட்டேன்... நாடற்று, வீடற்று காட்டிலே அலையட்டும் அவர்கள்! அந்த சிறுக்கி பாஞ்சாலி... என்னை சிரித்து அவமானம் செய்தாள் அல்லவா? அலையட்டும் காடுகாடாய்! கொக்கரித்தான் துரியோதனன்!" அந்த அவையே பயங்கர அமைதியில் மூழ்கியது! கண்ணன் புன்னகையுடன் விதுரனைப்பார்த்தான்! விதுரன் ஏதோ சொல்ல எழுந்தான்.

"சீ உட்கார்! நீ எனக்கு சிற்றப்பனு? துரோகி... உடன்பிறந்தே கொல்லும் வியாதி! நீ யாரைக்கேட்டு அன்றைக்கு பாண்டவர்க்கு வாக்குத்தந்தாய்? உனக்கு எப்போதும் பாண்டவர்கள்தான் உயர்த்தி! தின்பது எங்கள் உப்பு! பேசுவது அவர்கள் பக்கம்! துரோகி!... 'துரியோ-தனன் நாக்கு விதுரனை சுட்டது!' என்னடா சொன்னுய்? நானு துரோகி? உனக்கு அழிவு காலம்வந்துவிட்டது! அக்ரம சூதாட்டத்தில் பாண்டவரை வென்று துரோபதையை கற்பழிக்க, அவமானம் செய்தாய்... உன் அழிவு கூடாது என்று பலவகையிலும் தடுத்து நிறுத்தினேன் முடியவில்லை! உனக்கு கேடுகாலம் வந்துவிட்டது! பாண்டவர் சாபம் உன்னை விடாது!" இனி உன் முகத்தில் விழிப்பதே... மகாபாவம்... துண்டை உதறிய விதுரன் கண்ணனை வணங்கி விடைபெற்று வெளியேறினுன்!

"தொலைந்தான்...!" வெறுப்புடன் கூறினுன் துரியோதனன்! இவையெல்லாம் கண்டும் கூட அவையில்

யாரும் விதுரனை நிற்கச் சொல்லவில்லை. கண்ணன் மனம் நொந்தது. சே இந்த சபையிலே தர்மத்தைக்காக்க எவருமே இல்லையா?"

அப்படியானால் இவர்கள் அனுபவிக்க வேண்டியது தான்! 'சரி நான் வரட்டுமா? கண்ணன் எழுந்தான்! உட்கார் கண்ணா! சகுனி சிரித்தபடியே கூறினான். உன்னிடம் ஒன்று கூறுகிறேன். பாண்டவர்க்கு ஒரு வீடு கூட தர மாட்டோம். நீ அதை பக்குவமாய் அவர்கட்கு சொல்லி வேறு தனி நாட்டை ஸ்தாபிக்கச் சொல்...!''

"என்ன சகுனியாரே! என்னிடமே... மிரட்டலா? நான் பாண்டவரிடம் இப்படி சொல்ல வேண்டுமா?" ஆமாம் கட்டாயம் சொல்லத்தான் வேண்டும்! துரியோதனன் முழங்கினான் ... இல்லாவிடின் ...? இல்லாவிட்டால் ... சகுனி சிரிக்க... துரியோதனன் கண் அசைக்க கண்ணன் இருந்த பலகை மேடை... மடமடவென சரிய கண்ணன் அதல பாதாளத்தில் விழுந்தான்!

அந்த அரண்மனையே பூகம்பத்தில் தாக்கப்பட்டது போல ஆடியது! கதவுகள், சன்னல்கள், அறையில் மாட்டப் பட்ட ஓவியங்கள் யாவும் உடைந்தன! பயங்கர சூறாவளி போல உலகம் நிலைகொள்ளாமல் தவித்தது! உடனே பெரும் கூக்குரல்! ஆரவாரம்! பயங்கர கர்ஜனை! கௌரவர் திணறி கீழே வீழ்ந்தனர். அதள பாதாளத்தில் இருந்து ஒரு நெடிய உருவம் நான்கு திருக்கரங்களும், பீதாம்பரமும் வைர அணிகலன்களும், புன்னகை முகமும், நீலமேக நிறமும் - பஞ்சகச்சமும் இடையில் உடுத்திய பட்டாடையும் கொண்டு எழுந்தது ஓர் பெரிய உருவம்.

அதன் தலை வானத்தை தொட்டது! கால்கள் பாதாளத்தில் அழுத்தியது! 4 திருக்கரங்களிலே சங்கு, சக்கரம், கதை முதலியன ஏந்தியபடி அது கீழே உள்ள கௌரவர் அவையைப் பார்த்தது. ஆனால் அக்ரமக்கார கௌரவர்க்கு இத்தெய்வீக தோற்றம் காணப்படவில்லை! அந்த அவையில் உள்ள நல்லோர்க்கு மட்டுமே இந்த விஸ்வரூபம் தெரிந்தது. தேவர் பூமாரி பொழிய மகேசுவரனும், பிரம்மனும் கை கூப்பித்தொழ, வானுலகமும் பூலோகமும் அரக்க உலகமும் ஈரேழுபதினேழு லோகங்களும் கை கூப்பித்தொழ தவம் செய்யினும் கிட்டாத பரந்தாமனின் விஸ்வரூபத்தரிசனம் கிட்டிய நல்லவர்கள் மகா பாக்யசாலிகள்,

ஆனால் 100 கௌரவர்க்கும் சகுனிக்கும் கிட்டிய தரிசனத்தைக் காணலாமா?. பயங்கரத் தோற்றமும், சிவந்த கண்களும், கோரைப் பற்களும், பகுவாயும், கொண்ட சிரகும், அரக்க உருவமும், உதிரமும் ஒழுகும் நாக்கும் நான்கு கரங்களிலே அப்போதுதான் வெட்டிய தலைகளுடன் ரத்தம் ஒழுக, உலகமே நடுநடுங்க ஆயிரம் யானைகளும், பதினாயிரம் யாளிகளும், லட்சம் சிங்கங்களும் சேர்ந்து பேய்க்கூச்சலிடுவது போன்ற ரத்தம் உறைய வைக்கும் ஆக்ரோஷமான கூச்சலுடன் அந்த உருவம் அவர்களிடம் மெல்ல நகர்ந்து வர ஆரம்பித்தது.

அதன் நீக்கண்கள் உண்மையான நெருப்பைக்கக்க பகுவாய் அக்னி ஜுவாலையை வீசிட, அவ்வுருவம் தன் பகுவாயை திறக்க அதிலிருந்து இதைப்போல விகாரமான உருவங்கள் ஒன்றாக, பத்தாக, நூறாக, ஆயிரமாக வந்துக் கொண்டே இருந்தது. கௌரவர்கள் இதைக்கண்டு பேய்க் கூச்சலிட்டு மயங்கித் தரையில் சாய்ந்தனர்.

"சாந்தி பரந்தாமா... சாந்திக்கொள்!"

பரமேஸ்வரனும், பிருமனும் அதன் எதிரேவந்து வணங்கியப்படி வேண்டுகோள் விடுத்தனர். "ஹரி தாங்களே இப்படி ஆவேசப்பட்டால் இனிஉலகம் தாங்குமா? தங்கட்கு தெரியாது? இந்த அக்ரம கௌரவர், பாண்டவர் கையாலே மடிவார்கள். அதற்கு எதற்கு இந்த வீணருக்காக ஒரு அவதாரம் மகாப்பிரபு?"

அந்த உருவம் மௌனமாக.. இரண்டு தெய்வங்களையும் பார்த்தது. அதன் பகுவாய் மூடியது. அந்த ஆயிரக் கணக்கான உருவங்களும் அந்த பெரிய உருவத்தில் கலந்து மறைந்தன. பரந்தாமன் சினம் தணிந்தது! அவன் உருவம் சிறிதாக அழகிய கண்ணனாக, புல்லாங்குழல் கையிலேந்தி. அந்த இனிய புன்னகையுடன் அவர்கள் முன்னே நின்றான்.

பிருமனும், பரமனும் மறுபடியும் வணங்கியபடி தங்கள் உலகங்கட்கு சென்றனர்! உலகம் ஒரு நிலைக்கு வந்தது. புயல் ஓய்ந்தது - மக்கள் மிருகங்கள் யாவும் அமைதியடைந்தன! எரிமலை அடங்கியது. கௌரவர்கள் பேயறைந்ததுபோல விழித்தப்படி நின்றனர். சிரித்தப் படியே ஒரு விரலை மட்டும் அவர்கட்கு காட்டி எச்சரிக்கை செய்த கோபாலன் வெளியே வந்து தம் ரதத்தில் ஏறினார்.

---

## அத்தியாயம் மூன்று

---

கண்ணனைக் கண்ட ராதை ஓடோடி வருகிறாள். 'பிரபு பக்தவச்சலா! வந்துவிட்டீர்களா?' ஆசையுடன் அணைக்கிறாள் கண்ணனை. கிட்டத்தட்ட எட்டு நாட்கள் தேக்கிவைத்த ஆசையல்லவா அது? பரந்தாமா இன்று மாலை யமுனைக்

கரைக்கு செல்வோமா?' அழகிய கன்னங்கள் சிவக்க கேட்டாள் ராதை. கோபாலன் முடியாது என்று தலையாட்டினன்! ராதைக்கோ கோபம். கோபத்துடன் முகத்தை சுளுக்கிக் கொண்டாள்.

வரவர என்மீதே உங்கட்கு அன்பில்லே! வேறு எவள் மீதோ... கண்ணன் முத்துப்பற்கள் தெரிய சிரிக்கிருன். ஆமாம் ராதா... ஒரு பெண் ஒரே பெண்.. சதா சர்வ காலமும் அவள் நினேவுதான். தூக்கத்திலும், விழிப்பிலும் உணர்விலும், மயக்கத்திலும் அவள் நினேவுதான். இன்னும் ராதைக்கு அதிக கோபம் வந்துவிட்டது. யார் அவள்! சொல்லாமல் உங்களே விடமாட்டேன்! உங்களுடன் பேச மாட்டேன்! அவள் மதிவதனம் கூம்பியது! கண்கள் நீரால் நிறைந்தது. உதடுகள் மடித்து அழுகையை அடக்கிப் பார்த்தாள் ராதா! ஆனல் துக்கம் வெடித்தது.

பரந்தாமன் திடுக்கிட்டான். அவனது கரங்கள் அவளே அணைத்தது. முதுகை வருடியது. கன்னங்களே இழைத்தது; அந்த இன்பத்தில் ராதை ஊமையானள், பரந்தாமனின் பரந்த மார்பிலே சாய்ந்தாள், உலகையே மறந்தாள்.

பெண்களே... எத்தகைய பாக்யசாலி இந்த ராதை? ஜன்ம ஜன்மங்கள் ருஷிகள் தவம் செய்தினும் கிட்டாத பரமாத்மாவின் ஆலிங்கனம்இவளுக்குகிடைத்துள்ளது!இவள் செய்த மாதவம்தான் என்ன? என்று ராதையை புகழ்ந்து பாடிய கவி ஏமன்னவை மறக்க முடியுமா?

நாட்கள் மாதங்களாகியது. பாண்டவர்க்கு 5 வீடுகளே கூட தரவில்லே கௌரவர்கள். ஆகவே குருஷேத்திரத்தில் போர் பிரகடனம் செய்யப்பட்டது. பாண்டவர்களும்

கௌரவரும் 56 தேச மன்னர்களை போட்டியிட்டு அழைத்து தங்கட்கு ஆயுத உதவிகளையும், இதர உதவிகளையும் பெற்று கொண்டிருந்தனர். ஆனால் பாண்டவர்கள் நாடிழந்து காட்டிலே அலைந்தவர்கள் கௌரவர்க்கு நிகராக படைகளை எப்படி திரட்ட முடியும் அவர்களால்?

பரந்தாமன் கண்ணனையே முழு மனதுடன் நம்பினர் பாண்டவர்கள். ஒரு நாள் அர்சுனன் கண்ணனிடம் வந்தான். கண்ணனுக்கு அர்சுனன் என்றாலே உயிர். அர்சுனனும் மாமா, மாமா என்று பாசத்துடன் இழைவான். ருக்மணி-யிடமும், ராதையிடமும் பேசி அவர்களது ஊடலை நீக்கி விட்டு கண்ணன் தன் இல்லத்தில் அமர்ந்திருந்தான். அர்சுனனின் ரதம் வரவும், வீரர்களின் ஆரவார முழக்கமும் கேட்டது. கண்ணன் வாசலை நோக்க, கைகளை விரித்தபடியே அன்பும் பாசமும் இழைய பசுவை நோக்கித் தாவும் கன்றாக ஓடி வருகிறான் பார்தன். கண்ணனும் தன் கைகளை அகல விரித்த படியே ஓடிவரும் கண்ணனை ஆரத் தழுவுகிறான்.

"பரந்தாமா! ஜனார்தனா! கிருஷ்ணா!" அர்சுனன் குரல் அடைபட்டு கண்ணீர் வெள்ளமாகக் கொட்டுகிறது. கண்ணனின் குவளை மலர்களிலும் கண்ணீர். அர்சுனா! என் அருமை மருகா! அவன் கரங்கள் இறுக அவனை அணைக்கிறது! ராதையும், ருக்மணியும், பாமாவும் இக்காட்சியை நெகிழ்ச்-சியுடன் காண்கின்றனர்.

* * * *

கண்ணா! புற்றீசல்கள்போல் வரும் கௌரவப்படையை எங்களால் சமாளிக்க முடியுமா மாகாப்பிரபு? அர்சுனன்

பரிதாபமாக வினவுகிறான். அர்சுனா... என் அண்ணா பலராமரே அந்த தூர்தர்கள் பக்கம் இருக்கிறார். அவர்கட்கு நான் படை உதவி செய்ய பரிவுரை செய்துள்ளார்,

கண்ணன் மெள்ள இதைக் கூறுகிறார்.

"ஹா... பிரபு! அப்படியென்றால் தாங்கள் எங்கள் பக்கம் இல்லையா? படைகளுடன் அவர்கள் பக்கம் போய் விடுவீர்களா? அர்சுனன் அதிர்ச்சியுடன் கேட்க, கண்ணன் 'அர்சுனா .. அதை நீயும் துரியோதனுமே நிர்ணயிக்கவேண்டும்' நாளை எனது படை உதவிகேட்க என்அண்ணா பலராமருடன் துரியோதனன் வருகிறான்.

நான் ஒரு தேர்வு வைக்கிறேன். என்படை முழுதும் ஒருபக்கம். நான் மட்டும் ஒருபக்கம் – யாருக்கு எதுவேண்டும் என்று கேட்பேன்! உனக்கு எது வேண்டுமோ கேள் அர்சுனா! கண்ணன் இதழ்கள் மர்மப் புன்னகை செய்கின்றன.

மறுநாள்

துரியோதனனை அழைத்துக் கொண்டு பலராமர் வருகிறார். கண்ணனின் முகத்தை நேருக்கு நேர் காணகூசிய துரியோதனன் தலை குனிகிறான்! "என்ன துரியோதனா அனைவரும் நலம்தானே?" வேண்டுமென்றே கண்ணன் வினவ 'உம்' என்று மட்டும் துரியோதனன் கூறுகிறான்.

துவாரகை அரண்மனை ;

கண்ணன் ஒரு ஆசனத்தில் அமர்ந்திருக்க அவன்பக்கம் பலராமர் ஒருபொன் ஆசனத்தில் அமர்ந்துள்ளார். எதிரே

அர்சுனனும், துரியோதனனும் ஆசனங்களில் அமர்ந்து உள்ளனர்.

பலராமர்தான் பேச்சை துவக்குகிறார் "கண்ணா உன் படையுதவியும், உன் உதவியும் கேட்டு துரியோதனன் வந்துள்ளார்! "கண்ணன் புன்னகைத்தபடி" அதற்காகத் தான் அர்சுனனும் வந்துள்ளார் அண்ணா!" என்றான்.

"ஆனால் எப்படி இருவருக்கும் நான் செய்யமுடியும்?" கண்ணன் கேட்க, அனைவரும் யோசிக்கின்றனர். கண்ணனே ஒரு முடிவும் கூறுகிறான்" ஒன்று செய்யலாம்! என் படை முழுதும் ஒரு பக்கமும் நான் மட்டும் நிராயுதபாணியாக ஒரு பக்கமும் இருக்கிறேன்! யாருக்கு எது வேண்டுமோ அதை கேளுங்கள்"

துரியோதனன் யோசிக்கிறான்! அர்சுனனும் தான். "இந்த இடைப்பயலை படைகளில்லாமல் பெற்று நான்என்ன செய்வது? அப்படியே என்பக்கம் வந்தாலும் பாண்டவர் பக்கமே இந்த கிருஷ்ணன் சாய்வான் ஆகவே இவனது படை-களையே கேட்போம். "எனக்கு கண்ணனின் படைகள் மட்டுமே போதும்" துரியோதனன் கூறினான். அர்சுனனோ "என் ஐயன் ஒருவன் மட்டும் என்பக்கம் இருக்கட்டும், இந்த உலகையே வெல்கிறேன்! இவர் படைகள் எனக்குத் தேவை இல்லை இவர் மட்டுமே தேவை" கண்களில் நீர் பெருக கூறிய அர்சுனன் கண்ணனை தழுவுகிறான், அவனது கண்ணீர் கண்ணன் மேல் மலர்களாக வர்ஷிக்கிறது. அன்போடு அணைத்த கண்ணன் அர்சுனனின் கண்ணீரைத் துடைக்கிறான்.

அவனது தோள்களிலே தட்டிக் கொடுக்கிறான்! எல்லையற்ற அந்த புன்னகை அவன் இதழில் நடனமாடு-கிறது.

* * * *

இடம் ; குருஷேத்திர போர்களம்

ஒரு பக்கம் கௌரவர்களின் கடல் போன்ற படை! அதிலே மாவீரர்களான துரோணர், பீஷ்மர், கர்ணன் முதலியோரும் சூழ்ச்சியில் சிறந்த சகுனியும் மற்றும் எண்-ணற்ற தளபதிகளும்,உபதளபதிகளும்,பல்லாயிரக்கணக்கான வீரர்களும் அவர்களின் ஆயுதங்களின் ஒளி கண்களைப் பறிக்க தேர்ப் படை, யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை என்று தனித்தனியே வியூகம் அமைத்து நிற்கிறது.

* * *

எதிர்ப் பக்கம் பஞ்ச பாண்டவர்கள், அவர்களின் படைகள், தளபதிகள், உபதளபதிகள். வீரர்கள், ஆயுதங்கள் பற்பல படைகளும் வியூகம் அமைந்து நிற்கிறது. அதன் முன்னே ஒரு கம்பீரமான 4குதிரைகள் பூட்டிய தேர். அதிலே அனுமக் கொடி பறக்க, அத்தேரிலே சாரதியாக பரந்தாமன் கண்ணன் அமர்ந்துள்ளார். அவரது முகம் என்றுமில்லாத தேஜசுடன் பிரகாசிக்கிறது. அவரது திருக்கரம் குதிரை-களின் கடிவாளத்தைப் பிடித்துள்ளது. இடது கரத்தில் வெண்மை நிற சங்கு ஏந்தியபடி உள்ளது. அத்தேர் பாண்டவர் பக்கம் சேர்ந்தபடி நிற்கிறது. பகவானின். பார்வை எதிர் புறம் பாய்கிறது. அடேயப்பா! அதர்ம வாதிகட்கு இத்தனை பெரிய படையா? தர்மத்திற்கு

சக்தி குறைவுதானு! அவர் மனம் இப்படி நினைக்கிறது. கரம் வெண்சங்கை! பாஞ்சசைன்யம்! என்ற புகழ்பெற்ற அந்த சங்கை எடுத்து வாயில் வைக்கிறது.

உலகமும், இயக்கமும், ஜீவராசிகளும், அண்ட கோளங்களும், பதினுலு லோகங்களும், மெய்வதிர்க்க அசுரர் நடுநடுங்க, தேவர்கள் துதிக்க, எரிமலை வெடிக்க, பூமி அதிர புயல் போன்ற பயங்கர முழக்கம் கேட்கிறது. அந்த பாஞ்ச சைன்யத்தில் இருந்து!

* * * * *

அந்த தேரிலே அர்சுனனும் அமர்ந்திருக்கிருன். போர் தொடங்க இரு பக்கமும் மிக்க ஆவலாக இருக்கிறது. கண்ணன் சமிக்ஞை செய்கிருர். அர்சுனன் தன் புகழ்பெற்ற காண்டீபத்தை கையிலே எடுக்கிருன். ஒரு முறை எதிர் தரப்பை பார்க்கிருன், உற்றுப்பார்க்கிருன். அவன் மேனி பதறுகிறது. உள்ளம் நடுங்குகிறது. எதிரே...

அவனது தாத்தா பீஷ்மர், குரு துரோணர் இன்னும் கர்ணன் அவனது நெருங்கிய பந்துக்கள்-மிகவும் அறிந்த நண்பர்கள் நாள்தோறும் உறவாடும் தம் சகோதரர்கள்...

"சே! இவர்களையா கொல்வது? இவர்களைக்கொன்று அந்த ரத்தக்குளத்திலே... நாம் ஆட்சி அமைக்கவேண்டுமா? மேலும் இவர்கள் யார்? நமது சகோதரர் - தாயாதியர்! ஒரே ரத்தம்! இவர்கள் தாத்தாவும் நம் தாத்தாவும் அண்ணன் தம்பிகள்! யார் ஆண்டால் என்ன? இவர்களே

ஆளட்டுமே! நமது ரத்தத்தையே பலிகொள்வதா? அப்படி ஒரு நாடு வேண்டுமா? புகழ் வேண்டுமா? மன்னராக வேண்டுமா? முடியாது! எனக்கு இந்தப் போர் வேண்டாம் இதனால் கிட்டும் பிரும்மஹத்தி தோஷம் வேண்டாம்.

சட்டென தனது கரத்திலிருந்த காண்டீபத்தை கீழே வைத்தான் அர்ச்சுனன். கண்ணன் அனைத்தையும் புரிந்துக்கொண்டான்! ஏதேது கதையையே மாற்றி விடு-வான்போலிருக்கிறதே – இந்த அர்ச்சுனன் இப்படி சண்டி செய்து போர் நின்று விட்டால் பாண்டவரின் சபதம் பாஞ்சாலியின்சபதம் என்னாவது? அவளின்கூந்தல் எப்போது முடிவது? அதர்ம கௌரவர்கள் எப்போது அழிவது? தனது அவதாரமே பயனற்றுவிடுமே! இப்படி எண்ணினான் கண்ணன்! அவனது கரம் அர்ச்சுனனை அணைத்தது. உதடுகள் மாயப்புன்னகை செய்தது.

"அர்ச்சுனா, ஏன் இந்த குழப்பம்!" மௌனமாக வாய் வினவியது!" உனக்கு தெரியாதா கண்ணா! நான் போரிடத்-தான் வேண்டுமா? அதுவும் யாரிடம்? நெருங்கிய நண்பர்-களிடம், பந்துக்களிடம்! அதோ பார் என் தாத்தா பீஷ்மர் என்னைத் தூக்கி வளர்த்தவர். அதோ என் குரு துரோணர் கல்வி அளித்த ஆசான், அதோ வள்ளல் கர்ணன் எது கேட்டாலும் இல்லையென்று கூறாத கர்ணவள்ளல்! இப்படிப் பட்ட மகான்களை போரிட்டு அழித்து நான் என்ன சொர்க்கம் காணப்போகிறேன்? வேண்டாம் கண்ணா! என்னை விட்டு விடு எனக்கு நாடும் வேண்டாம்–இந்த பாபமும் வேண்டாம் நாங்கள் மறுபடியும் அஞ்ஞாத வாசமே செல்கிறோம்.

"மருமகனே! உன் பாஞ்சாலியை அவமானம் செய்தவன் கரத்தை துண்டாட வேண்டாமா?" வேண்டாம் கண்ணு... அதற்கு பாஞ்சாலியும் ஒரு காரணம்; அன்று துரியோதனனை அவமதிக்கும்படி சிரித்தாள்,

"அதற்காக... பல ஆயிரம் பேருள்ள மகா சபையில் அவள் சேலையை உருவி... அவமானம் செய்தது சரியா?"

கிருஷ்ணு... மேலும் என்னைக் குழப்பவேண்டாம்! இல்லை மருகா! நான் குழப்பவில்லை; நீ தான் குழம்பியிருக்கிறாய்! சற்று என்னைப் பார்... என்பக்கம் திரும்பு.

அர்சுனன் கண்ணனின் பக்கம் திரும்பினான். கண்ணனின் முகம் பிரகாசிக்கிறது! எல்லையற்ற ஒளி! கண்களிலே அதீதமான சக்தி! அது பார்த்தனை மயக்குகிறது

கண்ணன் எழுகிறான்! அவனது திருக்கரம் குழலை ஏந்துகிறது! உதடுகளிலே பொருந்துகிறது! இசைக்கிறது ஒரு தேவ கானம்.

"கண்ணு... முகுந்தா... முராரீ!" கிருஷ்ணு, தயாநிதி... அர்சுனன் கரம் குவிகிறது... போர்க்களமே மயங்குகிறது, மாவீரர்களான துரோணர், பீஷ்மர், கர்ணன் மற்றும் ராசாதிராசர்... சேனு சைன்யம் பாண்டவர்கள் அவர்களது சேனைகள்... உலகம் 84 கோடி ஜீவராசிகள் தேவர்கள், அசுரர்கள், கின்னரர், கிம்புருடர் அனைவருமே அந்த கானத்திலே மெய்மறந்து... கண்ணீர் மல்க கரங்கள் குவிந்துவணங்க எல்லையற்ற ஆனந்தத்துடன் கேட்கின்றனர்.

பறவைகள் பறக்கவில்லை! வானத்திலே நின்றுவிட்டன! மெய்ம்மறந்து கேட்கின்றன! தாவரங்கள் அசையவில்லை! கண்ணனின் ஜீவ நாதத்தை மெய்ம்மறந்து ரசிக்கின்றது.

பூலோகமே அந்த சில நிமிடங்கள்... சொர்க்கமாகி விடுகிறது. இது போர்க்களம்; சண்டையிட வந்தோம் என்ற எண்ணத்தையே பாண்டவரும், கௌரவரும் மறந்து விட்டனர்.

அனைவர் கண்களிலும் கண்ணீர்! அனைவர் கரங்களும் கூப்பியபடியே உள்ளன.

திடீரென தன் கந்தர்வ குழல் கானத்தை நிறுத்துகிறான் கண்ணன். உலகம் விழிக்கிறது... அர்சுனனும் தன் நிலைக்கு வருகிறான்.

"அர்சுனா... இதோ என் வார்த்தைகளைக் கேள்... யார் உறவினர்? எது உறவு? எது ரத்தத் தொடர்பு?... நீ யார்? உன் தேகமா? உன் ஆத்மாவா?... நீ யார்?"

அர்சுனன் மயங்குகிறான்! கண்ணன் தனது திருவாயில் ஸ்ரீமத் பகவத் கீதையை அர்சுனன் கேட்க அருள்கிறான்... கரம் கூப்பி கண்கள் மூடி அந்த தெய்வீக கீதையை பார்த்து சாரதி சொல்ல... அர்சுனன் கேட்கிறான்.

பரந்தாமனின் கீதை பிரசங்கம் முடிகிறது. அர்சுனன் தெளிவு பெறுகிறான். அவனது கரம் காண்டீபத்தை ஏந்துகிறது! கண்ணன் முகம் மகிழ்ச்சியால் மலர்கின்றது.

கண்ணனின் கரம் தனது பாஞ்ச சைன்யத்தை பற்றுகிறது. அந்தப் பிளிதல் பாண்டவர்க்கும் சேனைகட்கும் எல்லையற்ற ஆக்ரோஷத்தையும், பலத்தையும் தருகிறது.

இரண்டு மகா சாகரங்கள் சங்கமம் ஆவதுபோல், இரண்டு மகா மேருகள் ஒன்றோடொன்று பொருந்துவது போல் இருபக்க சைன்யங்களும் மோதிக்கொண்டன! குருஷேத்திரம் உதிரத்ஷேதரமாகிறது!

தேர்கள் தேர்களுடன் மோத, யானைகள் யானைகளுடன் மோத, குதிரைப்படை குதிரைப்படையுடன் மோத, பயங்கர ரத்த ஓவியம் தீட்டியதுபோல் விளங்கியது அந்த இடம்!

வீரர்களின் மரண ஓலங்கள், யானைகளின் பயங்கரப் பிளிறல்கள் குதிரைகளின் அலறல்கள், வென்றவர்களின் ஆவேசக்குரல்கள் அடேயப்பா! பூலோக நரகம் ஒன்று இருந்தால் அப்போது இதுதான் என்று சொல்லலாம். வெட்டப்பட்ட உடல்களின் உதிரம் ஆறுக ஓடிவர யானைகள் குதிரைகள் வீரர்களின் உடல்கள், அதில் மிதந்துவரும் மரங்கள் குன்றுக்ள்போல் ஓடிவந்தன.

அக்ரம கௌரவரின் சேனை சைன்யம் சிதறின! ஓடின! இரத்தம் சிந்தின.

* * *

அது 18 நாள் போர்! தருமத்திற்கும் அதர்மத்திற்கும் நடைபெறும் பயங்கரப்போர்! அதர்மம் மெள்ள சாய்கிறது! கௌரவரின் முக்கிய சேனை வீரர்கள் மடிகின்றனர்.

கௌரவர்கள் இடிந்து போய் விடுகின்றனர். அஸ்வத்தாமன் மடிகிறான்-சிகண்டியினால் துரோணர் ஏறக்குறைய மடிந்த நிலையில் அம்புப்படுக்கையில் படுத்துக்கிடக்கிறார். அதர்ம துரியோதனன் கரம் வெட்டப்பட்டதுபோல் துடிக்கிறான்! புழுக்கள் போல் மடியும் தன் படைகளை விரட்டுகிறான்! என்ன கேவலம் பாண்டவர் படைபோல் 5 மடங்கு படை இருந்தும் அந்த பாண்டவர் படை முன்னே விட்டில்பூச்சிகள் போல மடிவதா! எல்லாம் இந்த கிருஷ்ணனின் சூழ்ச்சி.

அப்போது... இளம் சிங்கமென பாய்ந்து வருகிறான் அபிமன்யு, அர்சுனன் மகன்! சூரசம் ஹாரம் போல் தம் படையை சம்சரித்து விடுகிறான்! பொடிப்பயல்! நம்படையே சின்னாபின்னப் படுத்துகிறானே! துரியோதனன் கொடிய மனம் அரக்கதனமான அதர்ம திட்டத்தை உருவாக்குகிறது!

ஆமாம்! தங்கள் வியூகத்திலே அவனை சூழ்ந்து கொண்டு நிராயுதபாணியாக்கி தீர்த்துக்கட்டுவது. இந்த மகா புண்ய திட்டத்தை கைங்கரியம் செய்தவர் நமது குடி கெடுக்கும் சகுனி மாமா!

புலியென சீறும் அபிமன்யுவை தங்கள் வலையில் சிக்க வைக்கின்றனர். பின் ஒரேடியாக துரியோதனன் மற்றும் அவனது தம்பிகள், கர்ணன் பீஷ்மர் முதலியோர் அவனது ஆயுதங்களை-சூழ்ந்து தாக்கி நிராயுதபாணியாக்குகின்றனர்.

கர்ண வள்ளலே! யாருக்கு எது கேட்டாலும் தரும் வள்ளலே! - ஒரே ஒரு மழுங்கிய கத்திமட்டும் எனக்கு தர்மம் செய்யுங்கள்! கை கூப்பி தன் முன்னே கதறும் அபிமன்யுவை கண்டு - மௌனமாக கண்ணீர் விடத்தான் முடிந்தது

வள்ளல் கர்ணனுல்! ஆம், அதர்ம துரியோதனனின் செஞ்சோற்றை உண்டவன் அல்லவா? எப்படி அபிமன்யுவுக்கு கத்தியை தருவான்?

அதர்ம யுத்தத்திலே - அபிமன்யு என்ற சிங்கம் மாண்டது. பாண்டவர் பாசறையே துடித்தது! அர்சுனன் பொங்கி எழுந்தான்! கிருஷ்ணன் அவனே ஆஸ்வாசப் படுத்தினர். "கண்ணு நீ இருந்துமா இந்த அதர்மம் நடந்தது?" கண்ணீர் மல்க அர்சுனனைத் தழுவிக் கொண்டான் கண்ணன்! வேறு எதுவும் பேச முடியவில்லே.

ஏன் கண்ணு இந்த மவுனம்?"

பீமன் கோபத்துடன் கேட்டான் "பீமா... இனி அந்த அதர்ம கவுரவர்கட்கு எவரும் பரிவுரை செய்ய மாட்டார்கள்! தர்மம் அவர் பக்கம் போகாது – நிச்சயம் இந்தக் கயவர்கள் அனைவருமே பரிதாபமாக மடிவார்கள்; ஏனெனில் தர்மம் அழிந்ததாய் சரித்திரமே இல்லே! அப்படி அழிந்தால் நான் - எதற்கு இருக்கிறேன்? கண்ணனின் உருவம் பெரிதாகிக் கொண்டே இருந்தது.

* * * *

முகுந்தா... கருணுகர, கண்ணு, மகாப்பிரபு! உன் மகா திவ்ய ரூபத்தை பார்க்க இந்த மாபாவிகட்கு அருள் செய் மணிவண்ணு! கரங்கள் கூப்ப தர்மர் கண்ணீர் மல்க கண்ணனே பிரார்த்தித்தார்!

மேருமலே போன்ற உயர்ந்த உருவம் – அது பீதாம்பரதாரியாகத் திகழ்கிறது. கழுத்திலே கண்டசரம் கைகளிலே வீரக்கழல்கள் – தோள்களிலே வாகுவலயங்கள்

நான்கு திருக்கரங்கள் ஒன்றிலே சங்கு ஒன்றிலே சக்ரம். ஒன்றிலே கதை. ஒன்று பாண்டவர்க்கு ஆசிகூறும் வண்ணம் காட்டியது. நீல மலர்கள் போன்ற கண்கள், நீலத்தாமரை போன்ற மேனி! இடையிலே பஞ்ச கச்சம், பீதாம்பர உத்தரியம்! கழுத்திலே ரத்னாபரணங்கள், முகத்திலே அந்த கம்பீரம்! கண்களிலே அந்த எல்லையற்ற கருணை! அந்த திவ்ய தேஜஸ்! உதட்டிலே அந்த தெய்வீகப் புன்னகை!

ஆண்டாண்டு காலம் தவம் செய்யினும் சங்கரனுக்கும் பிரமனுக்குங்கூட எளிதில் கிட்டாத மாயவனின் விசுவரூபம் அன்று பாண்டவர்க்கு கண்குளிரக் கிட்டியது.

கடோத்கஜன் கரங்கள் கூப்ப, கண்ணீர் மல்க, உணர்ச்சி மேலிட பாடுகிறான்! ஆடுகிறான்!

கீதையின் நாயகனே... இராதையின் காவலனே... தருமத்தின் தலைவனே .. ஏழைகளின் நண்பனே... தன்யனானேன். தேவாதி தேவரும், முனிவரும், எவருமே எளிதில் கிட்டாத நினது திருக்கோலத்தை பாண்டவருடன் இந்த பாவியும் காணும் பாக்யத்தை அளித்தவனே! ஏழுமலையில் வீற்றிருப்பவனே! அன்னை லக்ஷ்மி தேவியின் இதயநாயகனே!

ஏழைக் குசேலனை, குபேரனாக்கிய தர்மாத்மாவே, நின்னையே அனுவரதமும் எண்ணி துதித்த அபலை மீராவை காத்து அருளியவனே! உன்னைக்காணவும் கூடாது என தடை விதித்த மாமியாரின் கொடுமையை நீக்கி சக்குபாய்க்கு வாழ் வளித்துநின்பாதாரவிந்தம் ஏற்றுக்கொண்டவனே! சதாரண மானிடப் பெண்ணாகிய கோதையை மணந்த தெய்வீ..

நாயகனே! நாள்தோறும் குளித்துவிட்டு உன்னை மலரால் அர்ச்சனை செய்த கஜேந்திரன் என்ற யானையை அழிக்கவந்த முதலையைக்கொன்று யானையை காத்த ஆதிமூலமே சரணம் உன் மலர்பாதங்கள் சரணம்.

இப்படி பாடியும்ஆடியும் பரமானந்தமாக இருந்தான் கடோத்கஜன்.

* * * *

மறுபடியும் போர்க்களம். கண்ணனின் எல்லையற்ற கருணையும், ஆலோசனையும் பாண்டவர்க்கு சஞ்சீவியாக இருக்கிறது. துரியோதியாதனுரின் படைகள் விட்டில்பூச்சி கள் போல சாய்கின்றது.

அப்போது கர்ணன்புயலெனசீறிவருகிறான்! பாண்டவ-படை அல்லோலப்படுகிறது! கண்ணன் பார்க்கிறான்! இவனை முடிக்காவிட்டால் பாண்டவர்க்கு பெரும் அபாயம்தான்! இவனிடம் கவச குண்டலங்கள், நாக அஸ்திரம்! அவைகள் இருக்கும் வரை இவனை யாரும் ஒன்றும் செய்யமுடியாது, போதாக்குறைக்கு இவன் செய்த தர்மங்கள் வேறு இவனைக் காத்துவருகிறது! இத்தனையும் பெற்ற இவனை...?

கண்ணன் ஒரு மாயப்புன்னகை உதிக்கிறான். இவன் மாளாவிடின் அர்சுனன் மாள்வான்! பாண்டவர் குலமே அழிந்துவிடும்! தர்மம் அழியவா தான் இவ்வளவு வேலையும் செய்தது? தன் அவதாரம் வீணுவதா?

அப்படியென்றால் கர்ணனா? அர்சுனனா? அர்சுனனா! கர்ணனா? கண்ணன் மனம் எண்ணியது! பின் முடிவும் எடுத்தது!

* * * * *

அன்று மாலை போர்க்களம் முடியும் வேளை! கர்ணன் தன் அஸ்திரத்தால் எதிரிகளை துவம்சம் செய்கிறான்! ஆனால் அவன் உடம்பிலே ஒரு அம்புகூட படவில்லை! தர்மதேவதை அம்புகளை தடுத்து நிறுத்துகிறாள்.

''தாயே என்ன இது? போர்க்களத்தில் இப்படி நீ செய்யலாமா? கர்ணன் மீது இடப்படும் ஆயுதங்களை எல்லாம் நீ தடுத்துவிட்டால் யுத்தம் என்ன ஆகும்? யுத்த தர்மம் தெரியவில்லையா அம்மா? கண்ணன் கேட்க நகைக்கிறாள் தர்மதேவதை!

''பரந்தாமா... இதைச் சொல்பவனும் நீதான்! தர்மத்தை காக்க தர்மாத்மாக்களை காக்கச் சொன்னவனும் நீதான்? என்னே உன் கருணை?" தர்மவானை காக்காவிடின் தர்மம் எப்படி பிழைக்கும்! உலகம் எப்படி இயங்கும்? நான் எனது கடமையை செய்கிறேன்! கண்ணன் வெட்கத்துடன் தலைகுனிகிறான்.

* * *

அந்த 90 வயது பிராமணர் தள்ளாடியபடியே கர்ணனது தேரண்டை வருகிறார்! சட்டென அதைப் பார்க்கிறான் கர்ணன்!ஓ .. இதென்ன சோதனை! யார் இந்த பெரியவர்? போர்களத்திலே என்னவேலை இந்த முதியவருக்கு

ஐயோ – ஏதாவது அம்போ, வேலோ அவர்மீது பட்டுவிடப் போகிறது. என்னிடம் வந்தவர் அடிபட்டு விட்டால் அந்த பிரும்மஹத்தி தோஷம் என்னைச் சேருமே! சட்டென தேரிலிருந்து இறங்கி அவரிடம்வருகிறுன் கர்ணன்.

''கர்ண வள்ளலே!'' குரல் அதிர நடை தள்ளாட, கர்ணனைப் பிடித்துக்கொள்கிருர் பெரியவர்! ஐயா, பெரியவரே... தாங்கள் யார்? இதென்ன இப்படி தள்ளாத வயதில் போர்க்களத்திற்கு வரலாமா? என்னிடம் மாலையில் பாசறைக்கு வந்திருக்கலாமே? படபடப்புடன் கேட்ட கர்ணனைப் பார்த்து புன்னகைத்தார் முதியவர்!

''கர்ணு... பசி! தாங்கமுடியாத பசி! மாலை வரை என்னுல் தாள முடியாது! ஆகவே இப்போது வந்தேன்'' பசியா... மகாப்பிரபு! அன்னம் வேண்டுமே? ஆனுல் இப் போது இது போர்களம் ஆயிற்றே! இங்கே உணவை எங்கே தேடுவது?

எனக்கு உடற்பசியில்லை மகனே ஆன்மீக பசி! தர்ம பசி! அதை அடக்க உன் ஒருவனுல்தான் இயலும்! ஓடோடி வந்தேன்.

''தர்மபசியா? சுவாமி... எனக்கு புரியவில்லை!'' கர்ணன் கேட்க முதியவர் கர்ணு நான் இளமையில் அதர்மம் செய்து செய்து பெரிய பாவ மூட்டையைச் சுமந்து கொண்டேன்! அதை நிவர்த்திக்க தர்மம் செய்ய வேண்டும். ஆனுல் என் வயது? எப்படி தர்ம காரியம் செய்து புண்யத்தை சம்பாதிக்க முடியும்? நீ வள்ளல்! கேட்டதை

மறுக்காதவன்! ஆகவே கண்ணு! நீ செய்த தர்மத்தை யெல்லாம் எனக்கு தாரை வார்த்துக்கொடுத்து - என் பாவத்திலிருந்து என்னை விடுவித்து மோட்சத்தை எனக்கு அளிப்பாய் மகனே! கர்ணனின் செங்கைகள் குவிந்தன. "ஐயா நான் மகாபாக்யசாலி! எங்கே என்னிடம் இல்லாதது கேட்டுவிடப் போகிறீர்களோ என்று பயந்தேன்.

இதோ இங்கே வாருங்கள். ஆனுல்... தர்மத்தை தாரை வார்த்துக்கொடுக்க இங்கே தண்ணீருக்கு எங்கே போவது? சுற்றும் முற்றும் பார்த்தன்! பெரியவர் சிரித்தார். "கர்ணு எதுக்கு தண்ணீர்? உன் உடம்பில் தைத்துள்ள அம்புகளில் ஒன்றைப் பிடுங்கினுல் உதிரம் வருமே! அந்த உதிரத்திலே எனக்கு தாரை வார்க்கலாமே" என்று கூறினுர்.

கர்ணன் எல்லையற்ற மகிழ்வு அடைந்தான். என் பாக்யமே பாக்யம், இதோ... அவனது வலது தோள்-பட்டையிலே தைத்துள்ள நீண்ட அம்பை பிடுங்க, உதிரம் பீரிட்டது. அதைப்பிடித்து தன் தர்மத்தை முதியவர்க்கு தாரை வார்த்துக் கொடுத்தான்.

"நான் செய்த தர்மம் முழுதும் இவருக்கு தானமாகத் தருகிறேன்" என்று தனது செங்கையில் ரத்தத்தை பிடித்து அதை முதியவர் கரத்தில் ஊற்றினுன். பெரியவரின் கண்கள் கலங்கின! கர்ணு! வள்ளலே! பெரியவர் தன் கரங்களிலே அவனை இறுக அணைத்துக்கொண்டார்.

அப்போது எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று கர்ணனுக்கு. வானிலே தேவர்கள் துந்துபி முழங்கினர்! பூமாரி பொழிந்தனர்.

கர்ணன் பிரமித்தான். என்ன இது! யார் இவர்? அவரைத் தலை தூக்கிப் பார்த்தான். பெரியவரின் முகம் மாறியது! அந்த எழிலார்ந்த புன்னகை! நீல வண்ண மேக முகம், கமலக்கண்கள், கரத்திலே புல்லாங்குழல்... கண்ணன் மெள்ள தன் உருவத்தைக் காட்ட....

"பிரபு... ஸ்ரீ கிருஷ்ணா... பரந்தாமா, ஜனார்தனா ஹரி! கர்ணனின் கரங்கள் குவிந்தன! கண்கள் அருவியென கொட்டியது! தேவர் மூவருக்கும் கிட்டாத பரந்தாமனின் விஸ்வரூபத் தரிசனம் எனக்குக் கிட்டியது நான் செய்த மகாபாக்யம். தேரோட்டி வளர்ந்த ஊர் பேர் தெரியாத மாபாவி, எனக்கும் உன் திவ்ய தரிசனத்தைத் தந்தாயே பரந்தாமா, லக்ஷ்மி நாராயணா! ஸ்ரீ கிருஷ்ணா... விம்மி அழுத படியே கண்கள் புனலாக கைகள் தலைமேல்குவிய கண்ணனின் முழு தரிசனத்தையும், எவர்க்கும் எளிதாககிட்டாத பரந்தாமனின் விஸ்வரூபத் தரிசனத்தைக் கண்டு களித்தான் கர்ண வள்ளல்.

இன்னும் கர்ணனிடம் சில சக்திகள் மிச்சமிருக்கிறது. அதனால் கூட அர்சுனனுக்கு ஆபத்து வரலாமே! கண்ணனின் சிந்தனை தீவிரமாகியது! ஒரு முடிவுடன் குந்திதேவியிடம் சென்றான் கண்ணன். தர்மபுத்திரர்க்கும் குந்திக்கும் மிக்க மகிழ்ச்சி.

"தர்மநந்தனா... உன் அன்னையிடம் சில விஷயங்களை தனியே பேச வேண்டும்" "பிரபு! எது செய்தாலும் எம்மை காக்கவே தாங்கள் செய்வீர்கள்! இதோ..." தர்மர் தன் தம்பியருடன் வெளியேறினார்.

குந்தியை தீர்க்கமாய் பார்த்தான் கண்ணன் 'குந்தி உனக்கு அர்சுனன் வேண்டுமா? வேண்டாமா?'

எதிர்பாராத இத்தாக்குதலினால் அதிர்ந்த குந்தி ''சுவாமி! இது என்ன இப்படி கேட்கிறீர்கள்? அர்சுனன் என் அன்புமகன் அல்லவா? அவன்எனக்கு தேவையில்லையா?" குந்தி இப்படி கேட்டதும் கண்ணன் புன்னகை செய்தார்.

அப்படியென்றால் கர்ணனை இழக்க வேண்டிவருமே?

என்ன கர்ணனையா? அவன் போனால் எனக்கென்ன? அவனுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?

ஆமாம்... கண்ணன் விஷமமாகச் சிரித்தார். அவனுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்! அவனைத்தான் அப்போதே பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டுவிட்டாயே! இனி என்ன சம்பந்தம் உனக்கும் அவனுக்கும்?

கண்ணா!... விம்மியபடியே கேட்டாள் குந்தி. அது... அந்த விஷயம்... எனக்கு எப்படி தெரியும் என்று கேட்கிறாய்? நான் மூவுலகுக்கும் முதல்வன் என்று நீயே அன்று சொன்னாயே! அப்படியானால் உன் விஷயமும் எனக்கு தெரியாதா?

அப்படியாயின் நான் ஆற்றில் விட்ட அக்குழந்தை என் முதல் செல்வன் கர்ணனா? எத்தகைய மாபாவி நான்? தலையிலடித்து அழுதாள் குந்தி.

குந்தி... அழ இது நேரமல்ல! உனக்கு கர்ணனா? அர்சுனனா? யார் வேண்டும்? ஐயோ! இதென்ன விபரீதம் எனக்கு இருவரும் தான் வேண்டும்.

இல்லை இருவரில் ஒருவன்தான் இருக்கவேண்டும். சீக்கிரம் யோசி... கர்ணனே இருக்கட்டுமா? அர்ஜுனன் போர்களத்தில் கர்ணன் கையிலே மாளட்டுமா?

ஐயோ கண்ணா.. என்னைக் கொல்லாதே! கர்ணன் என் மகன்தான், ஆனால் அது எவருக்கும் தெரியாதே! அர்சுனன் இன்றுவரை என்னுடன் இருப்பவன் ஆயிற்றே.

அப்படியாயின் அர்சுனன் தான் உனக்கு வேண்டும். ஓடு கர்ணனிடம்! நீ அவனது தாய் என்று அழு, அவனிடம் உள்ள நாகாஸ்திரத்தை அர்சுனன் மேல் ஒருமுறைக்குமேல் ஏவாதே என்று வரம் கேள்! இல்லையேல் உன் மகன் அர்சுனன்...

வேண்டாம் கண்ணா.. இதோ நான் கர்ணன் காலில் விழுந்து அந்த வரத்தை கேட்கிறேன்! தலைவிரி கோலமாக ஓடுகிறாள் குந்திதேவி.

இடம் ; குருக்ஷேத்திரப் போர்களம்

பாண்டவர்க்கும், கௌரவர்க்கும் கடுமையான போர் நடைபெறுகிறது. கௌரவர்களின் பெரியதலைவர்களும், சேனாதிபதிகளும் மாள்கின்றனர். குந்திக்கு கொடுத்த வரத்தால் கர்ணன் நாகாஸ்திரத்தை ஒருமுறை மட்டுமே அர்சுனன் மேல் விடுகிறான். அவன் அர்சுனன் தலையை குறிவைத்து விடுகிறான். கண்ணன் தேரையே பூமிக்குள் அழுத்த கர்ணனின் அஸ்திரம் அர்சுனனின் தலைப்பாகையை மட்டும் தட்டிச்செல்கிறது.

பின் அர்ச்சுனனின் காண்டீபம் கர்ணனின் உயிரைக் குடிக்கிறது. கர்ணனும் மாண்டான். கௌரவர்களின் பலமான தூண் இன்று சாய்கிறது! பேயறைந்தவன்போல காணப்படுகிறான் - பயப்படுகிறான் துரியோதனன்! என்ன வெல்வாரோ திட்டமிடுகிறான்! பயன் பூஜ்யம்தான்! துரியோதனின் 100 சகோதரர்களும் போரிலே மாண்டனர். அதிலே இன்னும் துர்சாதனன், சகுனி மற்றும் சிலரே இருந்தனர்.

* * *

போரின் உச்சக்கட்டம் கண்ணன் பாண்டவர்க்கு பக்கபலமாக சாரதியாக – அவ்வப்போது ஆலோசனைகளைக் கூறி வருகிறார். படையுதவி தவிர அனைத்து உதவிகளும் செய்யும் அவரை தருமபுத்திரர் நெஞ்சில் வைத்து பூஜிக்கிறார்.

சகுனிக்கும், சகாதேவனுக்கும் கடும்போர். சாத்திரங்களை கரைத்துக்குடித்த சகாதேவன் சகுனியைப் பார்த்து உறுமினான். 'அற்பனே இந்த அக்ரமத்துக்கே நீதாண்டா காரணம்! உனது அதர்ம சூதாட்டத்தால்தானே நாங்கள் இந்நிலை அடைந்தோம்!'

டேய் சிறுவா! இது போர்க்களம்! அவைக்களமல்ல! உனது பேச்சாற்றலைக் காட்ட! உன்னால் முடியவில்லையா? சொல் உனக்கு உயிர் பிச்சைத் தருகிறேன்! ஏளனத்துடன் கூறிய சகுனியின் வார்த்தைகள் சகாதேவனை கொதித்து எழச் செய்தது,

தனது புகழ்பெற்ற அஸ்திரத்தை எடுத்து அதை கண்களில் ஒத்திக்கொண்டு 'முகுந்தா, பிருந்தாவனதாரி!

உன் சக்ராயுதம் எப்படி அதர்மாத்மாக்களை விரட்டி அடிக்கிறதோ, அப்படியே எனதுஇந்த அஸ்திரம் இந்த அதர்மாத்மாவை அழிக்கச்செய்!' மானசீகமாக பிரார்த்தித்துவிட்டு கண்ணன் இருக்கும் திசைநோக்கி வணங்கிவிட்டு தன் அஸ்திரத்தை சகுனியின் மார்பை நோக்கி தொடுத்தான்!

பாறையை பிளக்கும் பிரம்மாஸ்திரத்தைப் போல அந்த அம்பானது அக்ரம சகுனியின் நெஞ்சிலே பாய்ந்து அவனது தீய எண்ணங்களை அழித்துவிட்டு முதுகு வழியே வெளியேறியது! பெரும் உதிரம் கொட்ட பயங்கர சத்தத்துடன் சகுனி மாண்டு வீழ்ந்தான். போர் நின்றது! பாண்டவர் அனைவருமே சகாதேவனிடம் ஓடிவந்தனர்! தருமர் அவனை அணைத்துக் கொண்டார்.

வீமனோ.. தன் தம்பியை தூக்கி முத்தமாரி பொழிந்தான்! கண்ணனின் ரதம் வந்து நிற்கிறது! பசுவை நாடி ஓடும் கன்றுக சகாதேவன் கண்ணனிடம் தாவுகிறான்! 'கண்ணா... இதோ இந்த துராத்மா சகுனியை அழித்து விட்டேன்! என்சபதத்தை நிறைவேற்றி விட்டேன். இந்த வஞ்சகனாலோ பாண்டவர் – கௌரவர்பகையே வளர்ந்தது!' கண்ணீர் பொங்ககூறிய சகாதேவனை அணைத்துக்கொண்டார் கண்ண பெருமான்.

"தர்மத்தின் வாதினை சூது கவ்வுமோ சகாதேவா... தர்மமே வெல்லும்! தர்மமே வெல்லும்!" கண்ணன் இவ்வாறாகக் கூறியதும் அனைவரும் கண்ணனை வணங்கினர். தத்தம் பாசறைக்கு திரும்பினர். அடிபட்ட புலிப்போல் உறுமிக்கொண்டிருந்தான் சுயோதனன். அவனைக்காணவே அஞ்சியபடி இருந்தனர் அவனது படை தளபதிகள்.

'முட்டாள்களே! கௌரவரின் சேனைகள் அந்த பாண்டவரைவிட 3 மடங்கு அதிகம் இருந்தும் எப்படி ஈசல்கள் மாதிரி மடிந்து விழுகிறார்கள். உங்கட்கு அவர்களை விட வீரம் இல்லையா? படை நடத்தும் திறமை, வியூகம் அமைக்கும் முறை தெரியவில்லையா? கர்ணனை இழந்தோம் –துரோணர் அம்பு படுக்கையிலே விழுந்துவிட்டார். அஸ்வத்தாமன் போனான்–நமது கல்தூண் போன்ற வீரர்கள் எல்லாம் போய்விட்டார்களே! இனியும் உங்களுக்கு வீரம் வரவில்லையா?'

அவனது உறுமலுக்கு எவரும் பதில் கூறவில்லை–துச்சாதனன் மாத்திரம் மெள்ள விழுங்கியபடி சொன்னான். 'அண்ணா அவர்கள் பக்கம் அந்த கபடதாரி கிருஷ்ணன்! இருக்கிறார்! அதுதான்...' நிறுத்துடா அறிவு கெட்டவனே! அந்த கிருஷ்ணனின் படைகள் எல்லாம் ஆயுதங்களுடன் நம் பக்கம் வந்து சேர்ந்துவிட்டதே! அது தெரியவில்லையா உனக்கு! வெறும் அந்த கோபாலன் மட்டும்தானே அவர்கள் பக்கம் இருக்கிறான்! அவனால் படைஇன்றி என்ன சாதிக்க முடியும்?

இல்லை வந்து .. அவன்...! வாயை மூடு... இனி பேசாதே!நாளைய போர்களத்துக்கு நீ படைகளை தாங்கிசெல்.

வணங்கியபடியே வெளியேறினான் துச்சாதனன்

* * * * *

மறுநாள் - துச்சாதனின் தலைமையில் போர்களம் ரணகளமாகியது. எதிர்தரப்பில் பீமனும், நகுலனும் முன்னேறினார்கள். கண்ணன் ரத சாரதியாக இருந்தார்.

"கண்ணு .. இந்தப்பாவி துர்சாதனன்தானே நமது பாஞ்சாலியை துயில் உறித்தான்-இவனை அங்கம் அங்கமாக சிதைத்து... பற்களை நறநறவென கடித்தான் பீமன்!"

பொறு பீமா... அவன் அப்படித்தான் உன்கையில் சாகப்போகிறன்! இதோ அவனது தேர் எதிரே நிற்கிறது. உம் நடத்து உன் நாடகத்தை! பீமனுக்கும் துர்சாதனுக்கும் பயங்கரபோர்.அம்புகள் பொறி பறந்தன,வாட்கள்மின்னின. வேலாயுதங்கள் இருவரது கரங்களிலும் விளையாடி கூர் மழுங்கின!ஒருவருக்கொருவர் சலிக்கவில்லை!ஒரு அம்பு பீமனின் மூக்கை பதம் பார்த்தது. வந்தது பீமானுக்கு கோபம்! தனது தண்டாயுதத்தால் அவனது தேரையும், பாகனையும். குதிரைகளையும் தூளாக்கினுன்.தடுமாறி நிலத்தில் வீழ்ந்தான் துர்சாதனன்.

அவன் மீது ஏறி நின்று அவனத் கரத்தை பிடித்து இழுத்து அதை துண்டாக்கினுன்-கால்களை கிள்ளி எறிந்தான் எவனது முகத்தை துவைத்து, மிதித்து கூழாக்கினுன் பீமன். அப்போதுதான் அவன் வெறி தணிந்தது.

அவன் வீழ்ந்தது கேட்ட பாஞ்சாலி தலைவிரிகோலமாக ஓடிவந்தாள்! துர்சாதனின் உடம்பில் ஒழுகும் பச்சை ரத்தத்தால் இரண்டு கரங்களிலும் அள்ளி எடுத்து அதை தன் கூந்தலில் தடவிக்கொண்டபின் அதை முடித்துக் கொண்டாள்! அவளது சபதமும் அன்று நிறைவேறியது! "பாவி துர்சாதனன் ரத்தத்தால் அபிஷேகம் செய்தபின் தான் என் கூந்தலை முடிப்பேன்" என்று அன்று தன்னை மானபங்கம் செய்த அவையிலே சூளுரைத்தது நிறைவேறியது.

மெள்ள கண்ணன் அவளிடம் வந்தான். 'பாஞ்சாலி உன் சபதம் நிறைவேறிவிட்டது. தாயே... நீ மகிழ்ச்சியாக செல்' அன்புடன் அவளை தடவியபடியே அழைத்துச் சென்றான் பரந்தாமன்.

'கிருஷ்ணா .. முராரி... அன்று நீ என் மானங்காத்தாய் அதை எப்படி ஐயா நான் மறப்பேன்?' கண்களில் கண்ணீர் பொங்க பரந்தாமனை வணங்கிச்சென்றாள் பேதைபாஞ்சாலி.

அடுத்த நாள்... போரின் உக்ரம் மிகவும் அதிகமாக இருந்தது. ஆம் அன்று கௌரவர்படைக்கு துரியோதனன் தலைமை தாங்குகிறான்! பாண்டவர் படைக்கு பீமன் தலைமை ஏற்கிறான்! இரண்டு பாசறைகளிலும் ஒரே ஆர-வாரம்! காலை விடிந்தது. அண்ணா .. தர்மரிடம் வந்து நின்றான் பீமன் யுத்த களத்தவனாக! அவனது கம்பீரத்தை பார்த்து வியந்தபடியே அவனை நோக்கினார் தர்மபுத்திரர்

'அண்ணா போரிலே வெற்றிவாகை சூட என்னை வாழ்த்துங்கள்' நெடுஞ்சாண்கிடையாக விழுந்தவனை தூக்கி தழுவிக் கொண்டார் தர்மராஜர்!

தம்பி... அவரது கண்கள் நிறைந்தன. அதர்மத்தை வென்று தர்மத்தை நிலைநாட்டு...

உன் சபதத்தை நிறைவேற்று... வெற்றியுடன் திரும்பி வா... பீமனின் வாளின்நுனியில் தன் விரலால் கீண்டி... அதிலிருந்து வரும் தூய உதிரத்தை தம்பியின் நெற்றியில் இட்டார் தர்மர்! வெளியே .. வாழ்த்துதல்களும் ஆரவார முழக்கமும் அதிகமாயின! பரந்தாமன் வாழ்க! துவாரகை அதிபர் வாழ்க! மூவுலகிற்கும் முதல்வோன் வாழ்க!"

'ஓ .. கிருஷ்ணனும் வந்துவிட்டார். பீமா கண்ணனை வணங்கி ஆசி பெற்றுக்கொள்!' உள்ளே வந்த கண்ணனிடம் பீமனை அணைத்தபடி அழைத்துச் செல்கிறார் தர்மநந்தன்.

"கண்ணா... என் தம்பியை ஆசீர்வதி! அனைத்தும் உணர்ந்தவன் நீ! அதர்மம் அழிய, தர்மம் செழிக்க என் தம்பி வெல்ல – ஆசிகள் கூறு பரந்தாமா!"

நெடுஞ்சாண்கிடையாக தன்காலில்விழுந்தவனை தூக்கி நிறுத்துகிறார் பரந்தாமன். அவரது அழகிய முகம் மலர்கிறது! 'பீமா என்றும் வெற்றி உன் பக்கமே! தர்மம் உன் பக்கமே'

முழுங்கிய பரந்தாமன் தனது சுண்டுவிரலை பீமனின் வாளினால் காயப்படுத்தி அதனால் தெரிக்கும் உதிரத்தை பீமனின்நெற்றியில் இடுகிறார். அந்த ஒரு வினாடி – உலகமே இலேசாய் மயங்குகிறது, நடுங்குகிறது. வான உலகிலே பிரமர், விஷ்ணு மற்றும் தேவாதி தேவர்கள், எண்பத்தி-நான்கு கோடி ஜீவராசிகள், மக்கள், ரிஷிகள், கின்னர், கிம்புருடர் ஆகிய அத்தனை உயர் குணத்திலும் தேவ, மனித, ஜாதிகளிலே சுண்டுவிரல் அறுபட்டு உதிரம் கொட்டியது! விலங்குகட்கு முன் கால்களிலே சுண்டுவிரல் அறுபட்டு ரத்தம் கொட்ட துடித்தது.

'பிரபு இதென்னஇரத்தம், மாயோனின்சுண்டுவிரலைப் பிடித்தபடி கண்ணீர் மல்க ரத்தத்தை துடைத்தாள் அன்னை மகாலட்சுமி!' அதுபோல சத்யலோகத்தில் பிரமனின் ரத்தத்தைத் துடைத்தாள் சரஸ்வதி!

மாயவன் புன்னகை செய்தான்! என் அம்சமான கிருஷ்ணன், தன் விரலை அறுத்து பீமனுக்கு உதிரபொட்டு

இடுகிறான் லக்ஷ்மி! அதனால்தான் எனக்கும் உதிரம் கொட்டு கிறது! புன்னகையுடன் ஸ்ரீ நாராயணன் கூறுகிறான்

அதுமட்டுமல்ல! அனைத்து உயிர்கட்கும் இந்த வடு இருக்கும். இன்று எல்லா உயிர்களும் ரத்தம் சிந்தியது! தர்மத்தைக் காக்க ஒரு சிறிய தியாகம்! மாயவன் சிரிக்கிறான்.

* * * * *

அடுத்த நாள். போரின் முக்கிய நாள். சரித்திரப்புகழ் பெறும்நாள். பாண்டவர் தரப்பிலே பீமன் தலைமை தாங்குகிறான்! கௌரவர் தரப்பில் துரியோதனன் படை ஏற்று நடத்துகிறான்! இரு தரப்பாரும் ஆவேசமாக போரில் ஈடுபடுகின்றனர்!

ஒரு சாரார் தர்மத்தைக் காக்க, தம் இழந்த நாட்டை மீட்க ஆவேசபோர் புரிய, மறுசாரார் தம்நாட்டை இழக்காதிருக்க தாம் இதுவரை அடைந்த நட்டத்தை ஈடுசெய்ய ஆவேசப்போர் புரிகின்றனர்.

பீமனும் துரியோதனனும் ஆவேசமாகப் போர் செய்கின்றனர். மலைகள் நடுங்குகின்றன! பனைமரங்களை வேரோடு பிடுங்கி ஒருவர்மீது ஒருவர் வீசுகின்றனர். மூவுலகும் இப்போரை கவனிக்கின்றன! இருவரில் எவருமே சளைக்கவில்லை! ஆயுதப்போர் சலித்து மற்போர் நடக்கிறது.

பீமனை தூக்கி அடிக்கிறான் துரியோதனன் ஒருமுறை! பீமனின் தலை பலமாக பூமியில் அடிப்படுகிறது. பீமனுக்கு வந்ததே கோபம்! துரியோதனனை தூக்கி தலைமேல் சுற்றி

கீழே வீசி எறிகிறான். அவனது கழுத்து எலும்புகள் முறிகிறது. பிணம்போல் ஆனான் துரியோதனன்! எலும்புகள் கூடி உடனே எழுகிறான்.

தன் தண்டாயுதம் எடுத்து பீமனை அடிக்க, மறுபடியும் தண்டாயுதப்போர் நடக்கிறது. தன் தண்டாயுதத்தை பல இடங்களில் தாக்கியும், துரியோதனன் சாகவில்லை! தலை இரண்டாக உடைந்தாலும் மறுபடியும் கூடி எழுகிறான்! பீமன் கை சளைக்கிறது! மனம் சஞ்சலப்படுகிறது.

பார்த்தார் கண்ணபிரான்! அவரது புன்னகை முகம் லேசாகச் சுருங்குகிறது. உடனே தனது தொடைகளைகாட்டு கிறார் பரந்தாமன்! பீமா... துரியோதனன் தொடைகளைப் பிள! சைகை செய்கிறார்.

இதை துரியன் கவனிக்கவில்லை. பீமன் புரிந்துகொள்-கிறான். ஒரே போடு! துரியோதனின் துடைகள் பிளவு படுகிறது. துரியோதனன் பயங்கர சத்தத்துடன் சாய்கிறான்! உயிர் ஊசலாடுகிறது. அவன் கண்ணனின் சதியை புரிந்து கொண்டான்.

'அடேய் கிருஷ்ணா... பேடி! உன் துரோகச் செயல் தானா இது? அதர்ம யுத்தம் செய்ய நீயே பீமனை ஊக்கு-வித்தாயே' கண்ணன் சிரிக்கிறார்! 'துரியோதனா அர்சுனன் மகன் அபிமன்யுவை தர்ம யுத்தத்தாலா கொன்றீர்கள்? ஒருவனை சூழ்ந்து, நிராயுதபாணியாக்கி அடித்து கொன்றீர்-களே அது தர்ம யுத்தமா?'

தன் தவறை உணர்கிறான் துரியோதனன் இறுதி நேரத்தில்! அவன் முகம் உண்மையிலே வேதனை அடைகிறது ஆமாம் அதர்மத்திற்கு அதர்மம்! தர்மத்திற்கு தர்மம்.

அவன் வாய் முணுமுணுக்கிறது! கண்கள் மூடுகிறது! உயிர் பிரிகிறது. பாண்டவர் பக்கம் ஒரே ஆரவாரம்- வெற்றி கோஷங்கள்! கௌரவர் புறமுதுகிட்டு ஓடுகின்றனர்! படை சிதறுகிறது. துரத்திச் செல்கின்றனர் பாண்டவர் சைன்யம்.

போர் முடிகிறது! சத்யம் வெல்கிறது! தர்மம் ஜெயிக்கிறது! பாண்டவர் படை வெற்றி வாகை சூடுகிறது.

* * *

மறுநாள் பாண்டவரின் வெற்றி விழா. ஊரே திமிலோகப்படுகிறது. பண்டவர்களும் அவரது சேனைசைன்யங்களும் ஒரு மாபெரும் வெற்றி விழாவினைக் கொண்டாடு கின்றனர்.

ஊரெங்கும் தோரணங்கள், வீதியெங்கும் கோலங்கள் வீடெங்கும் மங்களப்பொருட்கள். கண்ணனை பூரண கும்பத்துடன் வரவேற்று அழைத்துப்போகின்றனர். தர்மர் முதலான பஞ்சபாண்டவர்கள். மிகப்பெரிய மேடை! முத்துக்கள் இழைத்த ரத்தினங்கள பதித்தபொன்னாசனத்தில் பகவான் கிருஷ்ணன் அமர்ந்துள்ளார். வாடாத அந்தப் புன்னகையுடன்!

56 தேச மன்னர்களும் வந்திருந்தனர். விழாவிற்கு நாட்டியம், பாட்டு, நாடகம் என்று ஒவ்வொன்றாக நடக்கிறது. அனைத்திலும் பகவான் கிருஷ்ணனது கருணையையே

விவரித்துக் காட்டுகின்றனர். அத்துடன் பாண்டவரின் முடி சூட்டுவிழா, நாடேற்கும் விழாவும் நடைபெறுகின்றன, தருமநந்தர் பட்டம் ஏற்கிறார். கண்ணன் தம் திருக்கரத்தால் தருமருக்கு இரத்தினத்தாலான அவர்களது பண்டையகிரீடம் சூட்டுகிறார். நிறைந்த மனத்துடன் ஆசீர்வதிக்கிறார்.

ஐந்து பாண்டவரும் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்குகின்றனர். தர்மரின் கண்கள் நிறைகின்றன ,கண்ணா .. எங்களைக் காக்க பழையபடி முடிசூட்டி மன்னராக்க நீ எத்தனை தியாகங்களை செய்தாய்! எத்தனை சிரமப் பட்டாய்.

மணிவண்ணா .. உனது படைகளை எல்லாம் துரியோதனனுக்கு தந்து வெறும் கைகளுடனே எங்களிடம் சேர்ந்தாய்! உன் சுகம், சவுக்கியத்தை இல்வாழ்வை, உன் நாட்டை அனைத்தும் மறந்து எம்முடனே இரவு பகல் இருந்து எமக்கு வெற்றிதேடித் தந்தாயே இறைவனே! இந்த நன்றிக் கடனை எப்படி ஐயா திருப்பிக்கொடுப்பேன்?

தர்மரின் கண்கள் புனலாகி கண்ணன் மேல்வர்ஷிக்கிறது. கோபாலன் கரங்கள் பாசத்தோடு தர்மரை அணைக்கிறது! பின் கண்ணீரை துடைக்கிறது.

என் அருமை தருமநந்தா நான் என்ன தியாகம் செய்துவிட்டேன்? நீ .. எந்த நேரமும் சத்தியத்தைக் காக்கவே போராடினாய்! தர்மயுத்தம் செய்தாய். உன் தம்பிகளையும் தர்ம வழிகளிலே நடத்தினாய்! உன் தர்மம் உன்னைக்காத்தது. நான்வெறும் கருவிதானே தருமநந்தனா?

புன்னகையுடன் கூறினன் கோபாலன். பிறகு இனி நான் துவாரகைக்குசெல்லட்டுமா தர்மா? அங்கே பாமா ருக்மணி எல்லாம் எப்படியிருக்கிறார்களோ...

உடனே அர்சுனன், ஏன் மாமா அதில்கூட உங்கள் வேலையைக் காட்டுகிறீர்கள்? ராதா அத்தையை பார்க்க வேண்டாமா? அவன் குறும்பாக வினவ, அனைவரும் சிரித்தனர்! கண்ணன் புன்னகை அதிகமாகியது! உதடுகள் முணுமுணுத்தது. ராதே! பிரியே! என்று முணுமுணுத்தது. பாண்டவர், பாஞ்சாலி, குந்தி சகிதம் அன்புடன் வழி அனுப்ப கண்ணன் துவாரகைக்கு பயணப்பட்டார். மாமா... அர்சுனன் கண்கள் கண்ணீரைப் பொழிந்தன; எங்களை மறக்கமாட்டீர்களே? கண்ணன் அவனை அணைத்தான்; உன்னையா பார்த்தா! எந்நேரமும் மாமா, மாமா என்று என் உடனே இருந்து என்னை கீதை அருளச் செய்த உன்னையா மறப்பேன்?

என் செல்ல மருகனே... இல்லை... எப்போதும் இல்லை கண்ணனின் கண்கள் இலேசாக கலங்கின.

ஆ.. எனக்காக என் ஐயன் கண்ணீர் வடிக்கிறார் தேவாதி தேவர்க்கும் கிடைக்காத மகாபாக்யம் எனக்கு கிட்டியுளது! அர்சுனன் கண்ணன் மலர்பாதங்களில் விழுந்து எழுந்து ஆடி பாடி ஆனந்தமாய் வழியனுப்புகிறான்

பாஞ்சாலியும் 'அண்ணா என் மானத்தை அன்று காத்தீர்கள். என் சபதம் நிறைவேற உதவினீர்கள். ஏழேழு பிறப்பிலும் உங்களை மறவேன் என் மன்னா' என்று அடி தொழுதாள். பின் மகிழ்வுடன் கண்ணனை வழி அனுப்பி வைத்தாள்

இப்படி பாண்டவர் அனைவருமே கண்ணன் செய்த தன்மைகளைக்கூறி அழுது அவனை பிரிய மனமின்றி வழி அனுப்புகின்றனர்! கண்ணனின்ரதம் துவாரகை அடைந்தது. நந்தவனத்திலே வழிமேல் விழிவைத்து கண்களில் கண்ணீருடன் காத்திருக்கிருள் ராதை.

தேர் நந்தவனத்தையே முதலில்அடைகிறது! ஓடோடி வருகிருள் ராதை! 'கண்ணு, முகுந்தா, முராரீ... கைகளை விரித்தபடியே விரித்து அழுதபடியே ஓடிவந்து தன் இதயங் கவர்ந்தவனை அணைத்துக் கொள்கிருள்! ராதே! என்பிரியே! மனேகரி... கண்ணனுல் பேச முடியவில்லை! உணர்ச்சி வசப்பட்டு அவனும் அணைந்துக்கொள்கிருன்.

நெடுநாள் பிரிவு! கங்கையும் காவேரியும் சங்கமம் ஆவதைப்போல இருந்தது அவர்களின் சேர்க்கை! 'ராதா... பிரியே... ஏதாவது பேசு ராதா...' பிரபு! இப்படியே வாருங்கள்! யமுனு நதிதீரம் செல்வோம்! நீங்கள் பாடுங்கள் நான் ஆடுகிறேன்... அந்த பழைய உத்சாகம் சந்தோஷம் வரட்டும். இதோ... ராதா செல்லலாம் அங்கே! கண்ணன் கை ராதையின் கரத்துடன் இணைக்கிறது. இதோ இருவரும் சிரித்தபடியே யமுனு நதிதீரம் ஒடுகிருர்கள். ஆடுகிருர்கள். பாடுகிருன் காதல்சிட்டுகளைப்போல மகிழ்ந்து செல்கின்றனர் அவர்களைக்கண்டு உலகம் மகிழ்கிறது. பறவைகள் மகிழ்கின்றது, மிருகங்கள் மகிழ்கின்றன! தேவரும் ரிஷிகளும் கை கூப்பி வணங்குகின்றனர்.

இதோ அந்தக் கமலக்கண்ணனை... நெஞ்சார, மனமார கண்கள் புனல் பொங்க நாமும் வணங்குவோம்! துதிப்போம்! ஏனென்றால்... அவன் தான் பிறவித் துன்பத்தை போக்குபவன்! அவன்தான் சகல சௌபாக்யங் களும் தருபவன்! அவன் தான் செல்வத்தை வாரிவழங்குபவன் அவன்தான் தர்மத்தைக்காப்பவன்! அவன்தான் துட்டரை அழிப்பவன்! அவன் தான் மாங்கல்ய பலன் தருபவன்!

அவன் தான் தீனபந்து!
அவன்தான் ஜெகத் ரட்சகன்!
அவன்தான் தர்ம சாஸ்தா!



# ஸ்ரீமத் பகவத் கீதை

க்ஷத்ரியனான அர்சுனன் க்ஷத்ரியத் தர்மத்தை ஏற்று போரிடும் பொருட்டு களத்திற்குவந்தவன்! அவன் உள்ளமோ எதிர்ப்பக்கம் திரண்டிருப்பவர்களைக் கண்டதும் பேதப்பட்டு விடுகிறது. ஆன்மா நிலையானது. உடல் அழியும் இயல்பு உடையது! அந்த உடலினாலே கொள்ளும் உறவுப்பற்றும் அதன் காரணமாய் எழும் 'அவர்களைக் கொல்வதோ' என்ற இரக்க உணர்வும் அர்சுனனிடத்தே எழுகின்றன. உண்மைப் பொருள் இவை என்று தத்துவ நெறியை விளக்கி அவனைத் தர்மத்திலே செலுத்துவதே இப்பகுதியாகும்.

ஆன்மா நித்யமானது! அதை அழிப்பவனுமில்லை, அழிவதுமில்லை. உடல்கள் நிலையற்றவை. அதை ஒட்டிக் கொள்ளும் உறவும் நிலையற்றவை அதனால் தர்மப்படி நடப்பதே உண்மையான கர்மம் ஆகும். அதை விட்டு நழுவுதல் முறையற்றது. இப்படி பரந்தாமன் கண்ணன் அர்சுனனுக்கு கீதையில் உபதேசிக்கிறார்.

கண்டு காண்போம்

உலகிலே மெய்ப்பொருள் எது? பொய்மை எது? என ஆராய்ந்து அறியாதவர்க்கும் ஆணும் அற்று பெண்ணும் அற்று விளங்கும் அலிகட்கும் உண்டாவதல்லவோ இம்மயக்கம்? என்றும் அழியாத பழியல்லவோ இது

உலகில் நிலைபெறச்செய்யும்! இது சிறுமையிலும் சிறுமை-யன்றோ? இப்படி போர்க்களத்தே போரிடாது மறுக்கும் இத் தன்மைஒழியாத நரகத்தினிடையேவிழப்பண்ணுமே! அர்சுனா உன் போன்ற மாவீரர்கட்கு இது தகாது. அழியாத இந்தப் போர்க்களத்தை உன்னை அது எப்படிதான் வந்தடைந்ததோ என்று கண்ணன் அர்சுனனைப்பார்த்து கூறுகிறார். பயத்தை அடையாதே! என்று தேற்றுவதாயும் வருகிறது.

உள்ளத்தாலே பெரிதும் போற்றும் பெரியோர்களை எப்படிக் கொல்வேன்?என்று பார்தன் மீண்டும்கலங்குகிறான்.

அர்சுனா... இத்தகைய அறியாமை உனக்கு தகாதது இதை ஒழித்துவிடு! போரின் மேல் உன் உள்ளத்தை ஒருமைப்படுத்து! என்று கரிய திருமேனியும், சிவந்த வாயும் உடைய கண்ணபிரான் கூறுகிறார்.

இதைக்கேட்ட பார்தன் 'வணங்கத்தக்க பெரியோர் களாகிய இவர்களை எல்லாம் பகைவர் எனக்கொண்டு இவர்களைக் கொன்று அதனால் பெறும் பெருவாழ்வின் மகிமையைச் சொல்வாயாக, அதைவிட யான் பிறரிடத்தே சென்று பிச்சை எடுத்து உண்பது இனியதாகும் அல்லவா?

மேலும் இதோ இந்தப் போர்க்களத்தே எல்லையற்ற அருமையான எனது தந்தைமார்களும், அவர்கள் தந்தை-யராகிய பாட்டனார்களும் மெய்யறிவு செய்த ஆசிரியர்களும், எனது உயிரான நண்பர்களும், பெரியோரும் ஆகிய இவர்கள் அனைவரும் இங்கே குழுமியுள்ளனரே! எங்கள் பொருட்டு தங்களது உயிர்களை விடவும் துணிந்து வந்த இவர்களை எங்கள் சுயநலத்திற்காக நான் கொல்வதோ? பகர்வாய் கண்ணா!

குற்றமற்ற சிறுவர்களும், அவர்களது பிள்ளைகளும், மாமன்மார்களும் இப்போரிலே என்னிடம் சாக வந்து உள்ளார்களே! தாய் போன்ற தயாபரனே! போரிட எதிர்த்து நிற்கும் இந்த உறவினரை காணும் போதெல்லாம் என் வாய் உலர்ந்து போவதுமின்றி முகத்திலும் மலர்ச்சி ஏற்படவில்லை. முகம் வாட்டமுறச்செய்கிறது. தீயைப்போல் உடல் வெம்புகிறது. செவ்வையாக நிற்கவும் முடியாமல் இருக்கிறேன். மூங்கிலாலே உண்டான காண்டீபம் கூடஎன் கை நழுவி விடுகிறது என்று அர்சுனன் பதறியபடி கண்ணனிடம் கூறுகிறான். யுத்த சன்னத்தனாக வந்த பார்த்தன், உலகின் உறவுப் பாசம் அவனை வந்து கவிந்துக் கொள்கிறது. இதை உலகப்பாசம் என்ற அஞ்ஞானம் என்று பெரியவர்கள் கூறுகிறார்கள்.

மேலும் குன்றத்தை ஒப்பான தோள்களை உடை-யவனே அரசும் அதனால்வரும் போகமும், அந்தபோகத்தால் வரும் இன்பமும் எவர் பொருட்டு ராஜ்யமானது விரும்பப் படுகிறதோ, எவர் பொருட்டு போகங்கள் விரும்பப் படுகிறதோ, எவர் பொருட்டு பிற சுகங்களும் இச்சிக்கப் படுகிறதோ, அந்த ஆசாரியர் முதலிய இவர்கள் தங்கள் உயிர்மீதும், பொருள்மீதும், இச்சையற்றவராக இங்கே போர்களத்தில் நிற்கிறார்களே? இவர்களைக் கொண்டு வெற்றிபெற்ற அரசை அடைவது எதற்காகவோ? கருநிற மேனி கொண்ட பரந்தாமா?

இதனால் அவர்களைக் கொல்லுதல் தகாது! அவர்கள் என்னைக் கொல்பவர்களாக இருப்பினும் சரியே. மூவுலகு அரசபோகம் கிடைக்கினும் சரியே, அதை நான் விரும்பவில்லை. கேவலம், பூமிக்காகவோ இவர்களைக் கொல்வது? இப்போரின் வெற்றியாலே ஆகும் பொருள்

இதுவே, அதனால் அவர்களைக் கொன்றால் இறையருள் நமக்கு சித்திக்காது இழிவாகுமே அன்றி அதனால் எங்கட்கு ஒருவித இன்பம் எங்கும் கிடைப்பது இல்லை.

பெறுதற்கரிய வானுலக அரசுரிமை அதனைப் பெறுவதானாலும் கூட இவர்களைக்கொல்ல விரும்பாத நான் இந்த இராஜ்யம் பெறுவதன் பொருட்டு கொல்வேனோ பரந்தாமா?

என்று அர்சுனன் மனம் வேதனைப்பட்டு கண்ணனை கேட்கிறான். இத்தகைய மகாவீரர்களையும் எனது உறவினரையும் கேவலம் என் சுயநலத்திற்காக நான் கொன்று, அவர்கள் உயிரை வாங்கி, இந்த பரந்த ராஜ்யத்தை ஆளவேண்டுமா? ஜனார்தனா, இந்த மகாரதங்களின் மாவீரர்களின் மரணம் என்னை விட்டுவிடுமா? இந்த மகா பிரம்மஹத்தி தோஷத்தால் என் ஆன்மா கொடிய நரகத்திற்கு சென்றுவிடுமே-கிரிதாரி! என்று அர்சுனன் அழுதான்.

மின்னலைப்போல் ஒளி வீசும் புன்னகைக் கொண்டான் கண்ணன். அர்சுனன் பால் அருள் கொள்ளவும் செய்தான். மணமுள்ள செந்தாமரை மலரிலே வீற்றிருக்கும் மகா லட்சுமியை தன் மார்பிடத்தே கொண்டுள்ள பரந்தாமன் கண்ணன். அர்சுனனின் துயரங்களும் மாயையும், போரின் கண் அவனது கலக்கமும் அவனை விட்டு நீங்கும்படியான முறையை செய்யவும் எண்ணினான். வேதங்கட்கெலாம் நாயகனான அந்த வேதநாயகன் கண்ணன் எம்பெருமான் முடிவுசெய்யும் பொருளையும்,அதற்கும் முதற்பொருளாகவும் விளங்கும் மெய்ப்பொருளான தன்னை உள்ளபடியே அர்சுனனுக்குத் தெரிவிப்பவனாக தானே உபதேசம் சொல்ல தொடங்கினான்.

அர்சுனா, என் அருமை மருகா, உனக்கு ஏன் இந்த கலக்கம்? மயக்கம்? மாபெரும் இந்த குருஷேத்ரப் போரிலே நீ இப்படி பேசலாமா? வருந்தலாமா? எதிர் அணியினர், உன்னை வீரமற்றவன், விவேகமற்றவன் என்று இடித்துரைப்பார்களே? அது உனக்குத் தெரியவில்லையா?

இப்போது இவ்விடத்தே நிற்கும் யாவரும் சாகப் போகிறதே இல்லை! சாவார்கள் என நீ நினைக்கும் மகாரதர் களான இவர்கள் அனைவரும் கழிந்து போவதற்கு அரியவான தீவினை எதுவும் செய்யாததால் தம் உடல் நிலத்தே விழுவதற்கு முன்பாகவே தேவலோகத்தை அடைவார்கள்.

'சாவு' ஆன்மாவிற்கு என்றால் நிலைத்த பொருளான ஆன்மாவை சாவுக்கு உட்படுத்துவதாக நினைப்பதே பொருத்தமற்றது. அது உடலைக் குறித்தால், மாய்வார்கள் என்று நீ கருதும் இம்மகாரதர்கள் தீயசெயல்களை கனவிலும் செய்யாதவர்கள். அதனால் துயரமான இவ்வுலகில் எடுத்த உடலை இழந்ததும்தேவலோகத்தையே அடைகிறார்கள். அப் பொழுதும் நீ அவர்க்கட்கு கேடு செய்தவனாக ஆக மாட்டாய் அர்சுனா.

அப்படி மோட்சத்தை அடையும் நித்யத்தவம் பெற்ற இந்த சிறந்தவர்களை துக்கப்படுபவர்க்கு உரியவர் என்று கருதி மயங்கினாய். உன் உள்ளத்தே இவர்களைக் குறித்து கலக்கம் கொண்டு அழுகின்றாய்.

ஆன்மா ஞானத்தை அறிந்தவன், ஆன்மா நிலையுளது என்பதை அறிகிறான். உடல் அழியக் கூடியது என்பதனையும் தெரிகின்றான். அழியும் பொருளைவிட்டு அழியாதஆன்மாவை

பற்றி சாகிறதே' என்று ஒருபோதும் கவலைப்படுவதில்லை. நாம் அழிவதும் இல்லை, அழியப் போவதும் இல்லை! மாயக் காரியமான இந்த உடலைத்தான் சட்டை மாற்றுவதுபோல அடிக்கடி மாற்றிக்கொள்கிறோம்! சட்டை கழட்டி எரிவது பற்றி எவருமே கவலைப்படுவதில்லை அப்படித்தான் உடலாகிய இதனைப்பற்றியும் நினைக்க வேண்டும்.

காண்டீபம் ஏந்தியுள்ள கரங்கள் கொண்ட அர்சுனா கேட்பாயாக!

நமது ஆன்மாவை எவன் கொல்வதாய் அறிகிறானோ, எவன் இதைக்கொல்லப்படுவதாய் அறிகிறானோ அவ்-விருவரும் சரியாகஅறிபவர் ஆகார்; ஏனெனில் இந்தஆன்மா கொல்வதுமில்லை, கொல்லப்படுவதுமில்லை!

குலதர்மங்கள், கடமைகள் மிகச்சிறந்த வேதங்கள் இதனால் தான் கொல்கிறோமென்றோ அவர்கள் தன்னால் கொல்லப்படுகிறார்கள் என்றோ எண்ணி மயங்காமல் போர் செய்வது குலதர்மம் அர்சுனா!

ஆன்மாவானது தீயில் வெந்து அழிவது இல்லை, நீரிலே நனைவதும்இல்லை, காற்றிலே கலைக்கப்படுவதும் இல்லை. அது மட்டுமல்ல அது என்றுமே மரணிப்பதும் இல்லை.

பரமேஸ்வரனின் காண்டீபத்தை கொண்ட பார்த்தனே என்றும் கண்டறியாத ஒன்றைக்கண்டதுபோல் ஒருவன் ஆன்மாவை வியப்புடன் கண்டிருக்கிறான்! என்றும் பேசியறியாத ஒன்றைப்பற்றி பேசுவது போல் ஒருவன் அதைப் பேசுகிறான். என்றும் கேட்டறியாத ஒன்றைப்பற்றி கேட்பது

போல் ஒருவன் அதைப்பற்றி கேட்டு மகிழ்ச்சி அடைகிறான். ஆனால் மற்றொருவனோ கண்டாலும், கேட்டாலும், சொன்னாலும் அதன் உண்மை நிலையை அறியாதவனாகவே இருக்கிறான்.

ஆகவே ஆன்மாவின் நிலை இப்படிப்பட்டது. நீ க்ஷத்ரிய தர்மப்படி நின் கடமையை செய்வாயாக! என்கிறார் கண்ணபிரான்!

அர்சுனா, சகல நாடுகளிலும் இருக்கிற எவரும் அறியாதிருக்கும் சூக்குமமான ஆன்மாவைத் தெரிந்துக் கொள்—வாயாக! இதனாலே 'இவரை நான் கொன்றேன்' என நினைப்பதையும் கைவிடுவாயாக! மேலும் வேதங்கள் கூட வேந்தரின் தர்மம் புகழ் ஒளி தரும் போர் செய்தலே என்று கூறுதலால் சண்டை துவங்குவதை அறனல்லாதது என நீ ஒருபோதும் கருதி ஐயம் கொள்ளாதே! சுவர்க்கத்தை அடைய தானமும் தவமும் மட்டும் வழி அல்ல! போரில் வீரமரணமெய்தினால் கூட வீரம் சுவர்கம் சேரலாம்! இதனால் அரச தர்மம் போரிடுவதுதான்!

என் அருமை மருகா, அர்சுனா, மன்னரின் தர்மமான போரினை செய்வதற்கு நீ தொடங்காதிருந்தால் எனில் தர்மமும் புகழும் நின்னைவிட்டு போய்விடும் பசியும்,பாவமும் வந்துசேரும். அந்தப்பழி பாவத்தைவிட இப்போரிலே நீ உயிர்விடுவது சாலச்சிறந்ததன்றோ! அல்லாமலும் போர் முனைக் கண்டதும் நீ பயந்து ஓடிப்போயினை என இழிவாக நின்னை உலகம் ஏசும். அதனால் நீ முன்பு பெற்ற வெற்றிகள் எல்லாம் மங்கிவிடும், பகைவர்கள் உன்னை இழிவாகப் பேசினால் அதைவிட மிகுந்த துக்கம் வேறுஎன்ன வேண்டும்?

இப்போரிலே நீ வீரமரணம் அடைந்தால் வானவர் போற்றும் வானுடுகளுக்கும் சிறப்பு அடைவாய். வெற்றி அடைந்தால் இந்த மன்னர்கள் தொழுமாறு நிலைப்பெற்று இந்த புவியை ஆண்டு அனுபவிப்பாய். அதனால் போருக்கு விருப்பமுடையவனாகி எழுவாயாக!

அர்சுனா! அறிவுடையவனான நீ அறியதக்க கருமத்தை அறிவாயாக! சகலபலன்களும் அடையும் போதும், அதைப் பிரியும் போதும் இரண்டையும் சமமாகவே கொள்ளும் பெருமையுள்ள கர்மத்தினிலே நீ நிலைப்பெறுவாயாக!

பார்த்தா, நீசெய்யும் கர்மங்கட்கு பலனை விரும்பினால் மயக்கம் நீங்காது. மயக்கம் நீங்காதாயின் ஞானமும் பிறவாது. ஞானம் பிறவாது எனில் புண்யபாவமும் விலகாது, மனமும் ஒருமைப்படாது! மனம் ஒருமைப் படாதவர் என்னை அறியவும் மாட்டார்கள்.

பின் பார்த்தன் கண்ணனை வணங்கி பரம்பொருளே, ஞானி என்பதை யார் என்பதை எனக்கு விளக்கு எனகேட்க, கண்ணன் அர்சுனா, ''ஆமையானது தனக்கு ஆபத்தெனில் தன் ஐந்து உறுப்புகளையும் தன் ஓட்டினுள்ளே அடக்கித் தன்னை காத்துக்கொள்வது போல தீமையினை செய்கின்ற புலன்கள் ஐந்தையும் விஷயங்களில் செல்லவிடாமல் தன்னுள்ளேஅடக்கி சேர்த்துக்கொள்ளக்கூடியவன். வாக்கினாலே இகழ்கின்றதும், புகழ்கின்றதும் படுகிறவனாயினும் இரண்டையும் பாராட்டாது இருக்கிறவன் இவனே ஞானியாவன்.

— முற்றும் —



**கே. ஜி. கோபால்**

மாநிலத்தார் புகழவரும் மல்லைப் பாடி
    மாக்கவிஞர் கோக்கவிஞர் கோபால் என்பான்
ஆநிரைகள் காத்தகண்ணன் கதையை தன்னை
    அழகொழுகும் தமிழினிலே அள்ளித் தந்தான்

பாநலங்கள் சூழவரும் இந்த நூலைப்
    படிப்பவரைப் பரந்தாமன் பரிந்து காப்பான்
வானதிபோல் கருத்துவளம் வாய்ந்த அன்பர்
    வையத்தில் வாழ்ந்தோங்கி வாழ்க நீடு!

— க. [illegible]